KALKI 23.6.96
ரூ. 3.00

# கல்கி



- ஜூட்-அவுட் ஆன ஜெ!
- ஒலிம்பிக் போட்டியா? உல்லாசப் பயணமா?

# சசிகலா பற்றி கட்சிக்காரர்கள்!



# மனநிம்மதியான முதலீடு – பரிபூரண பாதுகாப்பு (TM)

உங்கள் டெபாசிட்டுகள் T. நகரில் உள்ள பிரதான அசையா சொத்தால் (டோர் நம்பர். 27 பி, பிளாக் 5488/1, ராமேஸ்வரம் ரோடு) பாதுகாக் கப்படுகிறது.

| படித்த அனுபவம் மிக்க நிபுணர்களின் சீரிய நிர்வாகம் | கௌரவமான வருமானம் | மரியாதையான சேவை |
|---|---|---|

**பென்ஷனர்/பொதுஜன பாதுகாப்புத் திட்டம் (TM)**

1 வருடம் : 24% + 4% இன்சென்டிவ் P.A.
2 வருடம் : 24% + 6% இன்சென்டிவ் P.A.
3 வருடம் : 30% + 2% இன்சென்டிவ் P.A.
5 வருடம் : 36% P.A

**வாடிக்கையாளர் வசதித் திட்டம் (TM)**

| | |
|---|---|
| எப்போது வேண்டுமானாலும் பணம் எடுத்துக் கொள்ளலாம் புதுப்பிப்பதற்காக வர வேண்டிய அவசியம் இல்லை | 30 தினம் 18%<br>45 தினம் 19%<br>60 தினம் 20%<br>90 தினம் 21% |

**முன்கூட்டிய வருவாய்த் திட்டம்: (TM)** முழு வட்டியும் டெபாசிட் செய்யும் தேதியன்றே தரப்படும். 1 வருடம்: 20%, 3 வருடம் : 55%.

**மாதப் பென்ஷன் திட்டம்; (TM)** டெபாசிட் ரூ. 10,000. காலம்: 5வருடம்; மாத வட்டி ரூ. 320

**சுமங்கலி கல்யாணத் திட்டம் (TM) மேக்சிமம் இன்கம் ஸ்கீம் (TM)**

| டெபாசிட் | காலம் | முதிர்வுத் தொகை |
|---|---|---|
| ரூ. 5,000 | 3 வருடம் | ரூ. 12,000 |
| ரூ. 10,000 | 3 வருடம் | ரூ. 24,000 |
| ரூ. 20,000 | 3 வருடம் | ரூ. 48,000 |

**குழந்தைகள் எதிர்காலப் பாதுகாப்புத் திட்டம் (TM)**

| டெபாசிட் | காலம் | முதிர்வுத் தொகை |
|---|---|---|
| ரூ. 1,000 | 15 வருடம் | ரூ. 37,000 |
| ரூ. 5,000 | 15 வருடம் | ரூ. 1,85,000 |
| ரூ. 10,000 | 15 வருடம் | ரூ. 3,70,000 |

**பெஸ்ட் பாண்ட் ஸ்கீம் (TM)**

| டெபாசிட் | காலம் | முதிர்வுத் தொகை |
|---|---|---|
| ரூ. 1,000 | 10 வருடம் | ரூ. 12,000 |
| ரூ. 5,000 | 10 வருடம் | ரூ. 60,000 |
| ரூ. 10,000 | 10 வருடம் | ரூ. 1,20,000 |

**தாத்தாவின் பரிசுத் திட்டம் (TM)**

| டெபாசிட் | காலம் | முதிர்வுத் தொகை |
|---|---|---|
| ரூ. 1,000 | 15 வருடம் | ரூ. 37,000 |
| ரூ. 5,000 | 15 வருடம் | ரூ. 1,85,000 |
| ரூ. 10,000 | 15 வருடம் | ரூ. 3,70,000 |

## பெஸ்ட் பெனிபிட் அண்டு கேரண்டி பண்ட் டிரஸ்ட் (Regd) (நிறுவியது : 1979)
## பெஸ்ட் பெனிபிட் பண்ட் லிமிடெட்

**தலைமை கார்யாலயம் :** 3வது மாடி, சாந்தி காம்ப்ளெக்ஸ், 26, ரங்கநாதன் தெரு, மாம்பலம் ரயிலடி சமீபம். T. நகர், சென்னை - 17.

**கிளை :** 7, முதல் மாடி, ஸ்டேஷன் ரோடு, தாம்பரம் சானடோரியம், சென்னை - 47.

**கிளை :** 5, 2வது மெயின் ரோடு, திரு. காலனி, குரோம்பேட்டை, சென்னை - 44.

**கிளை :** 13, காலேஜ் ரோடு, நங்கநல்லூர், சென்னை - 114.

**சொத்து பாதுகாப்பு, மாத வட்டிக்கும், அசலுக்கும் முன்கூட்டியே செக்.**

**உங்கள் வீட்டிற்கும் வந்து சேவை செய்கிறோம். போன் : 4348560, 4347025.**

BBGFT - பாதுகாப்பின் சின்னம்

***Prof. V. விவேகானந்த்***
B.Com., (Distn), DOA (Distn), M.B.A. (Distn), CAIIB (All India First), EKSAMD (West Germany) (Distn), IAS (Topper)
**Managing Director**

***Dr. பரமேஸ்வரி, M.B.B.S.***
**Chairman**

(TM) :Trade Mark

**சேமிப்பு கணக்கு 14%**

**எல்லா கார்யாலயங்களும் ஞாயிறும் திறந்திருக்கும்**

# ராஜினாமா செய்த வாஜ்பாய் கவிதை எழுதினாரா?

அரசியல்வாதிக்குரிய எவ்வித இலக்கணங்களுக்குள்ளும் அடங்காத எளிமை. எப்போதும் புன்னகை. பேச்சில் அநாயாசமான நகைச்சுவை. கூடவே கொஞ்சம் கவிதைத்தனம். யாருக்கும் பிடிக்கும் சிநேக பாவம். இவற்றின் ஒட்டுமொத்தம்தான் வாஜ்பாய்.

பாருங்கள், 'பதினோரு மணிக்கு உங்களைச் சந்திக்கிறேன்' என்று பத்திரிகையாளர்களுக்கு முன்னதாக அறிவித்து விட்டு பத்தேகாலுக்கே வந்து காத்திருக்கும் அரசியல்வாதி பற்றி எங்கேனும் கேள்விப்பட்டிருக்கிறீர்களா?

அந்த சனிக்கிழமை காலை வாஜ்பாய், பார்க் ஷெராட்டனில் ஆரவாரம் ஏதுமின்றி ஒரு சாதாரணப் பொது ஜனம் போல நுழைந்த போது, (ஒப்புக்கு ஒரே ஒரு துப்பாக்கிப் பாதுகாவலர்) அங்கிருந்த சில வெளி நாட்டினர் மயக்கம் போட்டு விழாத குறை.



"இவர் உங்கள் முன்னாள் பிரதமர் அல்லவா?" என்று வியந்து போனார்கள்.

அவசரமாக வாஜ்பாயுடனே நாமும் மாடி ஏற, 'விமான நிலையத்தி லிருந்து நேராகப் பத்திரிகையாளர் சந்திப்புக்குத்தான் வருகிறார்' என்றார் ஒரு பி.ஜே.பி. நிர்வாகி.

பேசாத தருணங்களில் எப்போதும் சிந்தனைவயப்பட்டிருக்கிறார் வாஜ்பாய்.

பேசுகிற போது கூட வார்த்தைகளில் வெகு சிக்கனம்; கவனம். பேசுகிற ஒவ்வொரு வரிக்கும் இடையே போதிய இடைவெளி விட்டு, மனசுக்குள் 'சரிதானா' என்று கேட்டுப் பார்த்துக் கொண்டு விடுகிறார் போலும்!

அந்தச் சின்ன இடைவெளியைக் கூட அனுமதிக்க மாட்டாமல் நம்மவர்கள் அடுத் தடுத்த கேள்விகளுக்குத் தாவி விடுகிறார்கள். அயோத்திப் பிரச்னை, பி.ஜே.பி.யின் மத வாதம், பெரும்பான்மையை நிரூபிக்க முடியாத பதிமூன்று நாள் சரித்திரம், தவறான கட்சியில் சிக்கிக் கொண்ட சரியான நபர் என்பதான அவரைப் பற்றிய விமர்சனம், இடஒதுக்கீடு, சிறுபான்மையினர் மீதான பி.ஜே.பி.யின் அணுகுமுறை என்று மாற்றி மாற்றிக் கேட்டுக் கொண்டே இருந்தார்கள்.

சரியான கூட்டம். புகைப்படக்காரர்கள் முன்னால் அவரை முழுதுமாக மறைத்துக் கொண்டு விட, முகமே தெரியாதபடிக்கு வெறும் சொல் விளையாட்டு.

ஆனால் வாஜ்பாய், கேட்பவரை நேரில் பார்க்காமல் பதில் சொல்ல மறுக்கிறார்.

"கொஞ்சம் முன்னால் வந்து முகத்தைக் காட்டுங்கள்!" – சிரித்தபடி மைக்கில் வேண்டு கிறார். பார்த்தபின்தான் பதில் வருகிறது.

ஒருமணி நேர நிருபர் கூட்டத்துக்குப் பின்னும் அவர் பேசத் தயாராகத்தான் இருந்தார். நிர்வாகிகளுக்கு என்ன அவ சரமோ... சட்டென்று நன்றி சொல்லி எழுந்து விட, வழியின்றி அவரும் எழுந்து விடுகிறார்.

பன்னிரண்டு மணிக்கு மேல் கவர்னரைச் சந்திக்க வேண்டும். வேகநடையில் அவர் கீழே இறங்க, விரைந்து அருகே போய், "ஜனாதிபதி யிடம் ராஜினாமா கடிதம் கொடுத்தபின் கவிஞர் வாஜ்பாய் ஏதாவது கவிதை எழுதி னாரா?" என்று கேட்டோம்.

நடந்தவாக்கில் நம் பக்கம் முகம் திருப்பி இலேசான முறுவல் காட்டி, "இல்லை.... இன்னும் இல்லை..."

**வா**ஜ்பாயிக்கே வியப்பாக இருந்திருக்க வேண்டும். சுமார் ஆறாயிரம் பேர் இருந்திருப் பார்கள். மிலிட்டரி அணிவகுப்பு மாதிரி துளி சப்தமில்லாமல் அப்படியொரு அமைதி.

நாலு நிமிஷ இறைவணக்கம், கொடி, தோரணம், கட்-அவுட் இல்லாமை, கோஷங் களற்ற அமைதி, அங்கே இங்கே அலையாமல் கூர்ந்த கவனிப்பு. எல்லாமே தமிழகத்து அரசி யல் கூட்டத்தில் புதுசு.

நிஜமான தேசிய ஒருமைப்பாடென்றால் அந்தக் கூட்டம்தான்! பி.ஜே.பி.யின் பொதுச் செயலாளர் ஓ. ராஜகோபால் மலையாளத்தில் சம்சாரிக்க, வெங்கையா நாயுடு தெலுங்கில் மாட்லாட, இல. கணேசன் கம்பராமாயணத் திலிருந்தெல்லாம் மேற்கோள் காட்டிப் பேச, வாஜ்பாய் இங்கிலீஷில் பேசினார்!

சரித்திரம் காணாதவிதமாக, முதல் முறையாகத் தமிழக சட்டமன்றத்துக்கு ஒரு பி.ஜே.பி. எம்.எல்.ஏ. (வேலாயுதம்-பத்மநாபபுரம் தொகுதி) தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பதில் வாஜ் பாயின் மகிழ்ச்சி எத்தகையது என்று இலேசில் சொல்லி விட முடியாது.

தம் பேச்சில் உணர்ச்சி பொங்க அதைக் குறிப்பிட்ட போது, மேடையில் அமர்ந்திருந்த வேலாயுதம் புல்லரித்துப் போனதைக் காண முடிந்தது.

உணர்ச்சிவசப்பட்டு அவர் வாஜ்பாயின் காலில் விழுந்த போது, கூட்டத்தில் எழுந்த மெல்லிய சலசலப்புக்கு அர்த்தம் இல்லாமல் இல்லை!

சற்று நேரம் முன்புதான் அவரே அ.தி.மு.க. அரசின் காலில் விழும் கலாசாரத்தை ஒரு பிடி பிடித்திருந்தார்!

**புது தில்லியில் 11, அசோகா ரோடு. கறுப்புப் பூனைப் பாதுகாப்புப் படையினர் சூழ அத்வானி கிளம்பிப் போனதும், மூன்று மணி பத்திரிகையாளர் கூட்டத்துக்கு வந்தார் செய்தித் தொடர்பாளர் சுஷ்மா சுவராஜ், எம்.பி. அரக்கு வர்ணத்தில், சின்னச் சின்னப் பூக்கள் போட்ட காட்டன் சாரியில் பளீரென்று இருந்தார் சுஷ்மாஜி. நூற்றுக்கு மேற்பட்ட பத்திரிகையாளர்களின் சரமாரியான கேள்விகளுக்கு, இந்தியிலும் ஆங்கிலத்திலும் படு சரளமாகப் பதிலளித்தார். முடிந்ததும், நாம் தனிப் பேட்டிக்குக் காத்திருப்பதாகச் சொன்னதும், அறைக்கு வரச் சொன்னார்...**

**"அயோத்தியில் டிசம்பர் ஆறாம் தேதிச் சம்பவங்கள் நடந்திருக்கவில்லை என்றால் உங்களுக்கு இன்னும் அதிக இடங்கள் கிடைத் திருக்கக்கூடுமோ?"**

**"நாங்கள் அப்படி நினைக்கவில்லை. அப்படி அன்று நடந்தது சரி அல்ல என்று நீங்கள் சொன்னால், அப்படி நடந்தது தவறும் அல்ல என்று பலரையும் அச் சம்பவம் நினைக்க வைத்திருக்கிறது. அதைப் பற்றி அன்று மக்களிடம் எடுத்துச் சொல்லவோ, அவர்களுடைய எதிர்பார்ப்புக்கு எப்படி ரியாக்ட் பண்ணுவது என்றோ எங்களில் யாருக்குமே நினைத்துப் பார்க்க அவகாசம் இருக்கவில்லை. அந்தச் சம்பவம் ஸ்பாண் டேனியஸாக நடைபெற்றது என்று மட்டும் சொல்லுவேன்."**

**"தெற்கிலும் சரி, கிழக்கிலும் சரி – நீங்கள் காலூன்ற முடியவில்லையே? பரவலான**



# “வறட்சியையும் பசுமையாக்குவோம்!”

ஆதரவு பெற்று எப்படி ஆட்சிக்கு வரப் போகிறீர்கள்?''

'' கர்நாடகத்தில் நாங்கள் சில இடங்களைப் பிடித்திருக்கிறோம். பீஹாரில் சில இடங்கள். ஏன், உங்கள் தமிழ்நாட்டுச் சட்டசபையில் கூட எங்களுக்கு ஒரு எம்.எல்.ஏ. இருக்கிறார். காங்கிரசுக்கு ஒரு சீட் கூடக் கிடையாது. அவர்களை விட நாங்கள் பரவாயில்லையே! எங்கே நாங்கள் காலூன்றி இருக்கிறோமோ, அங்கே எல்லாம் எங்களைப் பலப்படுத்திக் கொள்ள விரும்புகிறோம். எங்களுக்கு ஆதரவு இல்லாத 'வறட்சிப் பிரதேசங்'களை வளமான 'பசுமை நிலங்க'ளாக்கும் முயற்சிகளில் ஈடுபடப் போகிறோம்.''

''டீவி செய்தி வாசிப்பவர்கள் கண்ணியமாகக் காட்சி அளிக்கவில்லை என்று சொன்னீர்களாமே?''

''நான் அப்படிச் சொல்லவே இல்லை. அவர்கள் வெகு கண்ணியமாகவும், பாந்தமாகவும் டிரஸ் செய்து கொள்கிறார்கள். நான் சொல்லாததைத் திரித்துப் போட்டார்கள். ஆபாசமான விளம்பரத்தைத் தடை செய்தேன். அதில் என்ன தவறு? நமது கலாசார மரபுக்கு எதிரான விளம்பரத்தைக் காசுக்காகக் காண்பிப்பது தவறு அல்லவா?''

கணவர் சுவராஜ், முன்னாள் மிசோராம் கவர்னர். இப்போது சீனியர் லாயர். சுஷ்மாவும்தான். வீட்டை நிர்வகிப்பதும், குழந்தை பாசுரியுடன் பொழுதுபோக்குவதும் தவிர, நிறையப் படிக்கவும் செய்கிறார் சுஷ்மா.

கல்லூரி நாட்களில் பேச்சுப் போட்டிகளில் நிறையப் பரிசுகள் வாங்கியிருப்பது இப்போது வெற்றிகரமான செய்தித் தொடர்பாளராகச் செயல்பட இந்த ஹரியானாக்காரருக்கு உதவுகிறது.

புதுதில்லியிலிருந்து : சாருகேசி

---

சட்டென்று, சாமர்த்தியமாக மைக் முன் வந்த இல. கணேசன், ''தகுதி மிக்க பெரியவர்களின் காலில் விழுந்து ஆசி பெறுவது இந்திய மரபு" என்று விளக்கம் தந்தாலும், 'அவர் விழுந்ததை விட இந்த விளக்கம் அசந்தர்ப்பமானது' என்று பின்புறமிருந்து குரல் கேட்டது.

தமிழகத்தில், பி.ஜே.பி., பொதுக் கூட்டத்துக்கு இத்தனை கூட்டம் சேரும் என்று கட்சிக்காரர்களே எதிர்பார்க்கவில்லை என்பது வெளிப்படையாகத் தெரிந்தது. 'அது, பி.ஜே.பி.க்காகக் கூடிய கூட்டமல்ல; வாஜ்பாய்க்காகத்தான்' என்றும் வெளிப்படையாகவே பேசிக் கொண்டார்கள்.

"அப்படியே இருந்தாலும் என்ன தவறு? பாராளுமன்றத்துக்கு இன்னொரு பொதுத் தேர்தல் விரைவில் வருமானால் அப்போது தமிழகத்தில் பி.ஜே.பி.யின் செல்வாக்கு இன்னும் கூடுதலாக அறியப்படும். அதற்கு அடல்ஜியின் வருகை முதல் காரணமாக இருக்கும்!" என்றார் ஒரு தொண்டர்.

முன்னாள் பிரதமர் வாஜ்பாய், தமிழக முதல்வரைச் சந்தித்ததுகூட இந்த 'வரப் போகிற தேர்தலை' மனத்தில் கொண்டுதான் என்று பலர் விமர்சிக்கிறார்கள். ஆனால் 'அரசியல் விரோதமா எடு ஆலிடை' என்றொரு கலாசாரத்துக்குப் பழக்கப்பட்டு போன நமக்கு, வாஜ்பாய் கோபாலபுரம் தேடிப் போனதும், கருணாநிதி தாம் வழக்கமாய் உட்காரும் நாற்காலியை அவருக்கு அளித்து விட்டு, தாம் எதிரில் வேறு நாற்காலியில் அமர்ந்ததும்... பண்பாட்டுப் பனிரிடல்களாகவே தெரிந்தன.

- ஔரங்கசீப்

வண்ணப் படங்கள் : யோகா

டெல்லி சிப்ஸ் :

# கையெழுத்துப் போட மறுத்த மாறன்!

●● மத்திய தொழில்துறை அமைச்சர் முரசொலி மாறன், அமைச்சக லெட்டர் பேடில், அரசு வழக்கப்படி இந்தியிலும் ஆங்கிலத்திலும் தமது பெயர் அச்சிடப்பட்டிருந்ததை விரும்பவில்லை. ஆங்கிலத்தில் மட்டும்தான் இருக்க வேண்டும் என்று சொன்னதோடு, இந்தியில் இருந்தால், கடிதத்தில் கையெழுத்துப் போட முடியாது என்றும் சொல்லி விட்டார்!

●● முதலில் நரசிம்மராவ் ரேஸ் கோர்ஸ் சாலை இல்லத்திலேயே இருக்கவும், தாம் நெ. 28 துக்ளக் கிரசென்ட் இல்லத்துக்குக் குடிபோகவும்தான் பிரதமர் தேவேகௌடா தீர்மானித்திருந்தார். அதற்காக துக்ளக் கிரெசன்ட் வீடு அவசர அவசரமாகப் புதுப்பிக்கப்பட்டது.

அப்புறம் ஜோசியர்கள் என்ன சொன்னார்களோ தெரியவில்லை. துக்ளக் ரோடு வீட்டுக்குக் குடிபோக வேண்டாம் என்று இரவோடு இரவாகத் தீர்மானித்தார் தேவேகௌடா! ரேஸ் கோர்ஸ் சாலையில் உள்ள 3, 5, 7, 9 என்று நாலு வீடுகள் கொண்ட பிரதமர் இல்ல வளாகத்திலேயே குடிபோவதென்று தீர்மானித்து, ஜூன் ஏழாம் தேதி அதிகாலையில், புது வீட்டில் பால் காய்ச்சும் சடங்கு நடந்தது. மூன்று குருக்கள் பங்கு கொள்ள, பிரமாதமாகப் பூஜையும் செய்யப்பட்டது! இப்போது மூன்றாம் நம்பரில் நரசிம்மராவ் இருக்கிறார்; ஐந்தில் தேவேகௌடா, ஏழாம் எண் பிரதமர் அலுவலகம், ஒன்பதில் எஸ்.பி.ஜி. (சிறப்புப் பாதுகாப்புக் குழு). மோதிலால் நேரு சாலை வீட்டுக்கு மாறுவதாக இருந்த நரசிம்மராவை, ஜோசியர்கள் ஜூன் 12-ஆம் தேதிக்குப் பிறகுதான் மாறலாம் என்று தடுத்து விட்டார்கள்!

●● பதவிப் பிரமாணம் முடிந்ததும், குடியரசுத் தலைவருடன் சம்பிரதாயமாகக் கைகுலுக்காமலே, ரிஜிஸ்தரில் கையெழுத்துப் போட விரைந்த ராம்விலாஸ் பாஸ்வான், சங்கர் தயாள் சர்மா மீது தமக்கு இருக்கும் வெறுப்பைக் காண்பிக்க, வேண்டுமென்றேதான் அப்படிச் செய்தாராம்! பதவிப் பிரமாண விழா முடிந்ததும், நடிகையும் எம்.பி.யுமான ஜெயப்பிரதாவை பாஸ்வானுக்கு ஒருவர் அறிமுகப்படுத்தி வைக்க, ஜெயப்பிரதாவை டின்னருக்கு வரும்படி அழைப்பு விடுத்தார் பாஸ்வான். ஜெயப்பிரதா அதைக் காதில் போட்டுக் கொண்ட மாதிரியே காண்பிக்கவில்லை!

●● ப. சிதம்பரம் தமது அமைச்சகத்தில் பொருளாதார நிபுணர் ஜெயராம் ரமேஷை அமர்த்தியிருக்கிறார். இதனால் நிதிச் செயலர் மான்டேக் சிங் அலுவாலியா, தொடர்ந்து அந்தப் பதவியில் நீடிப்பாரா என்பது சந்தேகம்தான். (ஜெயராம் ரமேஷ் தூர்தர்ஷனில் தினமும் பிஸினஸ் பிரேக்ஃபஸ்ட் நிகழ்ச்சியை வழங்குபவர் - ராஜீவ் காந்தி காலத்தில் சாம்பிட்ரோடாவுடன் பணிபுரிந்தவர்.)

●● முன்னாள் தமிழ்நாட்டு ஆளுநரும், அகாலி தளத் தலைவருமான சுர்ஜித் சிங் பர்னாலாவின் புத்தகம் 'த ஸ்டோரி அஃப் அன் எஸ்கேப்' விரைவில்

வெளியாக இருக்கிறது. 1994-ல் திடீரென்று ஒருநாள் இவர் தலைமறைவாகி, தனியாக ஊர் ஊராகச் சுற்றிய அனுபவங்கள்தான் நூல் முழுக்க.

வாஜ்பாயின் அமைச்சரவையில் பர்னாலா சேரத் தயாராக இருந்தும் கூட, சந்திரசேகர்தான், "அவசரப்பட வேண்டாம்; வாஜ்பாய் நம்பிக்கை வோட்டுப் பெறட்டும்!" என்று தடுத்து விட்டாராம்.

●● பிஜுபட்நாயக்கின் வாழ்க்கை வரலாறு வெளியாகப் போகிறது. கலைஞரின் சுயசரிதையையும் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வெளியிட, ஒரு பதிப்பாளர் முன்வந்திருக்கிறார். "சி.பி.ஐ. அதிகாரி என்.கே. சிங்கின் 'த பினெயின் ட்ருத்' விற்பனையில் சக்கைப் போடு போடுகிறது. ஹவாலா விவகாரம் பற்றிய சஞ்சய் கபூரின் நூலுக்கும் பிரமாத வரவேற்பு" என்கிறார் கனாட் பிளேஸ் புத்தக வியாபாரி ஒருவர்.

●● கிட்டத்தட்ட மூன்று டஜன் ஸ்பெஷலிஸ்ட் டாக்டர்கள், பிரதமரின் இருபத்து நாலு மணி நேர சேவைக்குத் தயாராக இருக்கும்படி அறிவுறுத்தப்பட்டுள்ளார்கள். பிரதமர் இல்லத்துக்கு வெளியே போடப்பட்டிருக்கும் கூடாரங்களுள் ஒன்றில் காத்திருக்கிறார்கள் சில டியூட்டி டாக்டர்கள்! பிரதமரின் மருத்துவப் பின்னணியை ரகசியமாகவே வைத்திருக்கிறார்கள்! "நாங்கள் பிரதமர் அலுவலகச் சிப்பந்திகளுக்குத்தான் சிகிச்சை அளிக்க முடியும். பிரதமருக்கு மருத்துவ உதவி தேவைப்பட்டால், ஆம்புலன்ஸில் உடனே ஆல் இண்டியா இன்ஸ்டிடியூட் ஆஃப் மெடிகல் சையன்ஸுக்கு அழைத்துப் போவதுதான் முக்கிய வேலை" என்கிறார் ஒரு டாக்டர்.

●● உத்தரபிரதேச எம்.பி.க்கள் 85 பேரில், 28 பேர் பா.ஜ.க.வைச் சேர்ந்தவர்கள். இதில் 21 பேர் மீது போலீஸில் குற்றப் பதிவுகள் இருக்கின்றன! நாடாளுமன்ற மொத்த எம்.பி.க்களில், 73 பேர் மீது போலீஸில் குற்றப்பதிவுகள் இருக்கின்றனவாம்!

புதுடில்லியிலிருந்து : **சித்தார்த்**


• மாறன்


• பர்னாலா


• ப. சிதம்பரம்


• கௌடா


• பாஸ்வான்


• ஜெயப்ரதா

# சுஜாதா பக்கம்



சாகித்திய அகாதமிக்காக சி.ஆர். ரவீந்திரனும் அகிலன் கண்ணனும் தம் சிறுகதைகளை வாசித்த கூட்டத்தில், சிறுகதை என்பது என்ன என்பதைப் பற்றி தலைமை உரைக்க அவகாசம் கிடைத்தது.

எனக்குத் தெரிந்த வரை ஒரே ஒரு விதிதான் அதற்கு. சிறிதாக உரைநடையில் விவரிக்கப்பட்ட கதை. A short fictional narrative in prose. வேறு எந்த வரையறைக்குள்ளும் நவீன சிறுகதை அடங்காது. நல்ல சிறுகதை என்பது சிறிதாக, சிறப்பாக உரைநடையில் விவரிக்கப்பட்ட கதை. சிறிதாக என்றால் சுமார் ஆயிரத்திலிருந்து பத்தாயிரம் வார்த்தைகளுக்குள் சொல்லப்பட வேண்டும் என்று குத்து மதிப்பாக வைக்கலாம். நூறு பக்கம் இருந்தால் அதை சிறுகதை என்று ஒப்பு கொள்ள தயக்கமாக இருக்கும். அதே போல் ஒரு பக்கத்தில் இருந்தால் அது கதையல்ல, கதைச்சுருக்கம். நான்கு வரிகளுக்குக் கீழ் என்றால் கவிதையாகச் சொல்லிவிடலாம். இந்த அளவு வரையறை கூட தேவையில்லை என்று நவீன விமர்சகர்கள் சொல்கிறார்கள். உதாரணமாக ஜாய்ஸின் 'யுலிஸிஸ்'ஸை ஒரு சிறுகதை என்று சொல்பவர்களும் இருக்கிறார்கள். கதை தேவையா என்பதையும் சந்தேகிக்கிறார்கள். ஆர்வெல்லின் A Hanging என்னும் கட்டுரையை ஒரு சிறுகதையாகப் பார்க்கிறவர்களும் உண்டு.

கதை சிறப்பாக இல்லை என்றால் அதை மறப்பார்கள். ஒரு சிறுகதை ஜீவித்திருக்க, அது சிறப்பாக சொல்லப்பட்டிருக்க வேண்டும். யாரைப் பற்றியும் எதைப் பற்றியும் இருக்கலாம். நூற்றாண்டு காலத்தையோ, சில நிமிஷங்களையோ சொல்லலாம். கறுப்போ, சிவப்போ ஏழையோ, பணக்காரனோ வயசானவர்களோ, இளைஞர்களோ வியாதியஸ்தர்களோ, தர்மகர்த்தாக்களோ மீசைக்காரர்களோ, மீன் பிடிப்பவர்களோ பஸ் பிடிப்பவர்களோ, சினிமா பார்க்கிறவர்களோ, நாய் வளர்ப்பவர்களோ, பாய் முடைபவர்களோ விஞ்ஞானிகளோ, வேதாந்திகளோ எந்த கதா பாத்திரமும் தடையில்லை. மனிதர்களே இல்லாமல் கூட கதை சொல்லலாம். அப்படி ஒரு விஞ்ஞானக்கதை இருக்கிறது. கண்ணீர் வர சொல்லலாம் சிரிக்கச் சிரிக்க, சொல்லலாம். கோபம், ஆர்வம் வர வெறுப்புவர... ஒன்பதில் ஏதேனும் ஓர் உணர்ச்சியைத் தந்தால் போதும்.

இவ்வளவு விஸ்தாரமாக அறுதியிடப்படும் சிறுகதையில் எனக்குத் தெரிந்து ஒரே ஒரு பொது அம்சம்தான் உண்டு. படித்த இரண்டு நிமிஷத்தில் மறந்து போய் விட்டால் அது கதையல்ல, பஸ் டிக்கெட். ஒரு வாரம் கழித்தோ ஒரு வருஷம் கழித்தோ ஞாபகம் இருந்து அதை மற்றவரிடம் மாற்றியோ, மாற்றாமலோ சொல்ல வைப்பது நல்ல கதை.

நான் 1970களில் எழுதிய சிறுகதைகளை இப்போது யாராவது நினைவு வைத்துக் கொண்டு சொல்லும் போது எனக்கு வேறு எந்த சான்றிதழும் அவார்டும் தேவையில்லை. நல்ல சிறுகதைகள் காலத்தையும் அன்றாட அவசரங்களையும் கடக்கின்றன.

ஒரு கதை உங்களை பாதித்திருந்தால் ஒரு மாதம் ஏன், ஒரு வருஷம் விட்டுக் கூட அதை நீங்கள் திருப்பிச் சொல்ல முடியும். இது உங்கள் ஞாபகப் பிரச்னை அல்ல. கதையின் பெயர்கள், இடம், பொருள், ஏற்பாடெல்லாம் ஞாபகம் இராது. ஆனால் கதையின் அடிநாதம் அதில் பாதித்த ஒரு கருத்தோ, வரியோ நிச்சயம் நினைவிருக்கும். அப்படி இல்லையென்றால் அந்தக் கதை உங்களைப் பொறுத்தவரையில் தோல்விதான்.

இதே விதிதான் கவிதைக்கும். இதேதான் நாவலுக்கும். ஒரு வாசகன் தனக்குப் பிடித்தமான எழுத்தாளனை ஒரு நண்பனைப் போல தேர்ந்தெடுக்கிறான். காரணம் அவன் எழுதுவது அவனுக்குப் புரிகிறது. கதையின் ஏதோ ஒரு பகுதியை வாசகனால் தன் மனத்தில் மீண்டும் வாழ முடிகிறது. அந்த எழுத்தாளன் அந்த வாசகனின் வாழ்வின் குறையை ஏதோ ஒரு விதத்தில் நிரப்புகிறான்.

(00 நல்ல கதைகளை அலசிய ஹெல்மட் பான்ஹைம் என்பவர் அவற்றுக்குச் சில அடையாளங்கள் சொல்லியிருக்கிறார். சிறுகதையின் ஆரம்ப வாக்கியத்துக்கு முன் கதையின் தொண்ணூறு சதவிதம் நடந்து முடிந்திருக்கும். இதை கொஞ்சம் யோசித்துப் பாருங்கள். அதாவது சிறுகதை, முடிவுக்கு மிக அருகில் ஆரம்பிக்கும் கதை. பெரும்பாலான கதைகள் ஒரு பேசப்பட்ட வாக்கியத்தில் முடிகின்றன. வாழ்க்கையின் அபத்தத்தைச் சுட்டிக்காட்டி முடிகின்றன; அல்லது கேள்விக் குறியில்...

ஃப்ராங் ஓ கானர், சிறுகதை, 'சமூகத்தின் விளிம்பில் இருக்கும் மனிதர்களின் தனிமையைப் பற்றிய கதை' என்கிறார். சிறுகதை ஒரு தனிப்பட்ட கருக்கமான அனுபவத்தைப் பேசுகிறது என்றும் அன்றாட அலுப்பு வாழ்க்கையில், உயிரின் புதிர் சட்டென்று புரியும் கணம் ஒன்றை அது சொல்லும் என்றும், அந்தக் கணத்தை ஒரு ரெவலேஷன் வெளிப்பாடு அல்லது Epiphany அவதாரம் அல்லது அற்புதத் தோற்றம் என்றும் பலவாறு சொல்கிறார்கள்.

அன்று சிறுகதை படித்த சி.ஆர். ரவீந்திரன், சிட்டி ஒரு முன்னுரையில் 'சிறுகதை ஒரு அற்புதக் கணத்தை நிரந்தரமாக்கும் ரசவாதம்' என்று சொன்னதைக் குறிப்பிட்டார். அதுவும் சரியே.

*(மீண்டும் அடுத்த வாரம்)*

**21st Century's**

# "Family-Deposit"



வாக்குறுதி . . . பாதுகாப்பு, வாழ்நாளெல்லாம் !




**A happy family, is a 21st Century Family.**

குழந்தைச் செல்வத்தின் வரவு, மட்டற்ற மகிழ்ச்சியின் வரவு. அந்த மகிழ்ச்சிக் கொண்டாட்டத்தில் குடும்ப உறவுகள் ஒன்று சேர்கின்றன. இத்தருணத்தை, குழந்தையின் எதிர்கால நல்வாழ்விற்காகவும் பயன்படுத்திக் கொள்ளுங்கள் – "பேமிலி டெபாஸிட்"டில் முதலீடு செய்யுங்கள். அது உங்கள் கனவுகளை நனவாக்கும்; உங்கள் செல்லக் குழந்தையின் வருங்காலத்தை வளமாக்கும். இதன்மூலம், உங்கள் குழந்தையின் ஒளிமயமான எதிர்காலத்திற்கு உறுதி செய்யுங்கள். அதற்காகவே, **ட்வெண்டி ஃபர்ஸ்ட் செஞ்சுரி மானேஜ்மென்ட் சர்வீசஸ் லிமிடெட்**, CRISIL–ன் FA+ மதிப்பீட்டை பெற்றிருக்கும் **"பேமிலி டெபாஸிட்"** திட்டத்தை உங்களுக்கு வழங்குகிறது.



## ட்வெண்டி ஃபர்ஸ்ட் செஞ்சுரி மானேஜ்மென்ட் சர்வீசஸ் லிமிடெட்

**நிர்வாக அலுவலகம்:** 'ஸ்ரீவித்யா' 32, டி.டி.கே. சாலை, சென்னை - 600 018. போன்: 4995155, 4994821, 4970151, 4970152. ஃபேக்ஸ்: 044-4994826.

**கிளைகள்:** ● **சென்னை:** (குரோம்பேட்டை) : 12, அனுமார் கோயில் தெரு, ராதா நகர் - 600 044. ● **(அம்பத்தூர்)** : 'சப்தகிரி', எம்டிஎச் ரோடு - 600 053 ● **மும்பாய்:** 603 B/604, தலாமால் சேம்பர்ஸ், 29, நியு மெரைன் லைன்ஸ் - 400 020 போன்: 022-2006811/2004153/ 2004154/2004160 பேக்ஸ்: 022-2004163. ● **கோயம்புத்தூர்:** 79/40, சேரன் டவர்ஸ், 78 அரசினர் கலைக்கல்லூரி சாலை - 641 018 போன்: 218094, ஃபேக்ஸ்: 0422-213673. ● **ஐதராபாத்:** 204/205, 6-3-550, மூன்றாம் தளம், ஆகாஷ் கங்கா, மெடிநோவா எதிரில், சோமாஜிகுடா - 500 082 போன்: 319371, ஃபேக்ஸ்: 040-312806. ● **திருநெல்வேலி:** 177, A-14, பார்வதி சங்கர் சன்ஸ் காம்ப்ளெக்ஸ், திருவனந்தபுரம் சாலை, வண்ணாரப்பேட்டை - 627 003 போன்: 0462-72827. ● **திருச்சி:** 6, சுந்தரம் ஆர்கேட், 13-A வில்லியம்ஸ் ரோடு, (திருச்சி சென்ட்ரல் பஸ் ஸ்டாண்டு எதிரில்), திருச்சி கண்டோன்மென்ட் - 620 001. ● **பெங்களூர்:** 403, ஈடன் பார்க், விட்டல் மால்யா ரோடு - 560 001. போன்: 080-2225535

**ஃப்ரான்சைஸி:** ● **கும்பகோணம்:** 105, சாரங்கபாணி கிழக்கு (மாடி) - 612 001 போன்: 0435-30487. ● மதுரை: 18-A, பூக்கார சந்து தானப்ப முதலி தெரு - 625 001 போன்: 0452-30481. ● நெல்லூர்: 16/II/227, வசந்த் விஹார், அர்பன் பேங்க் அருகில், வேடி.நகர் - 524 001 போன்: 0861-31289. ● சென்னை (அடையார்) : 5/9, முதல் மெயின் ரோடு, கஸ்தூரிபாய் நகர் - 600 020 போன்: 4918669.

Sans - 8 /TCMS/960139

*This advt. appears further to the statutory advt. published by the company in Makkal Kural and Trinity Mirror on 29th August and 18th November 1995. The text of the statutory advt. is also printed on the application form, which may be referred to before investing in the company's Deposit Schemes.*



*கத்தி முனையில் நடப்பது போன்ற நிலைதான் கர்நாடக முதல்வர் ஜே. ஹெச். படேலுக்கு. காரணம்? இவர் ராமகிருஷ்ண ஹெக்டே கோஷ்டி என்பதால், தேவே கௌடா கோஷ்டி அவ்வப்போது தொல்லைகளைத் தந்து கொண்டே தான் இருக்கும். கட்சி விரோத நடவடிக்கையில் ஈடுபட்டார் என்று ஹெக்டேவே கட்சி யிலிருந்து விலக்கப்பட்ட நிலையில், படேல் நிலை என்ன வாக இருக்கும் என்பது போகப் போகத்தான் தெரியும்.. இந்த நிலையில் இவர் எப்படி முதல் வரானார்? இவரது பின்னணி என்ன?...*

# முதல்வராக நடித்தார்: முதல்வராகிவிட்டார்!

ஹெக்டேவின் வேட்பாளரான ஜே.எச். படேல் கர்நாடக முதல்வராகி விட்டார். தேவேகௌடாவின் சிபாரிசையும் தவிர்க்க முடியாது என்பதால், சித்தராமய்யா துணை முதல்வராகியிருக்கிறார். இந்தத் தேர்வுகளின் பின்னணி மிகவும் சுவாரஸ்யமானது.

தமக்குக் கட்டுப்பட்ட சித்தராமய்யாவை எப்படியாவது முதல்வராக்கி விடுவது என்று முனைந்தார் தேவேகௌடா. அதற்கேற்ப காய்களை நகர்த்த ஆரம்பித்தார். சித்தராமய்யா பிற்பட்ட வகுப்பான குருபர் இனத்தைச் சேர்ந்தவர். "சமூக நீதிக்காகப் போராடுவதாகச் சொல்லும் கட்சி ஜனதாதளம். பிற்பட்ட வகுப்பைச் சேர்ந்தவரை முதல்வராக்கினால் பெருமக்கள் முன்னிலையில் நம் கட்சிக்கு ஒரு அந்தஸ்து இருக்கும்" – என்று சொல்லிப் பார்த்தார்.

கௌடாவால் ஏற்கெனவே ஓரங்கட்டப்பட்ட நிலையிலிருக்கும் ஹெக்டே, முதல்வர் தேர்விலும் தம்முடைய பங்கு ஒன்றுமில்லையென்று ஆகிவிட்டால் பிற்பாடு தமக்கும் கர்நாடகத்துக்கும் எந்தத் தொடர்பும் இல்லாமல் போய், தாம் அரசியல் அனாதை ஆகிவிடுவோம் என்று நினைத்ததால் தாமே நேரடியாகக் களத்தில் குதித்தார். எம்.எல்.ஏக்களை அழைத்து ஜே.எச்.பி.க்காக ஆதரவு திரட்டினார்.

ஹெக்டேவின் திட்டத்தை முறியடிப்பதற்காக டெல்லியிலிருந்து ஜனதாதளத் தலைவர்களில் ஒருவரான சரத் யாதவை அழைத்து வந்தார் கௌடா. " 'சென்ட்ரல் அப்சர்வர்' புதிய தலைவரைத் தேர்ந்தெடுப்பார்" என்றார்.

பிரதமரின் பாச்சா எம்.எல்.ஏக்களிடம் பலிக்கவில்லை. "இந்தக் காங்கிரஸ் கலாசாரம் நமக்கெதற்கு? எங்கள் தலைவரை நாங்களே தேர்ந்தெடுத்துக் கொள்கிறோம்'' என்று சொல்லி விட்டனர். 'சரி சித்தராமய்யா இல்லாவிட்டால் சபாநாயகராயிருக்கும் ரமேஷ்குமாரையோ அல்லது அமைச்சர் மஞ்சுநாத்தையோ முதல்வராகக் கொண்டு வரலாம்' என்று தேவே கௌடா செய்த முயற்சிகளும் பலனற்றுப் போயின!

அறுபத்தாறு வயதான ஜெயதேவப்பா ஹாஸ்பா படேல் ஷிமோகாவில் பிறந்தவர். (கர்நாடகத்துக்கு அதிக முதல்வர்களைக் கொடுத்த மாவட்டமே இதுதான்) கரிகானூரில் பெரிய ஜமீன்தார் பரம்பரை. ராம் மனோகர் லோகியாவால் ஈர்க்கப்பட்டு, சோஷலிஸ்ட் கட்சியில் இருந்தார். கர்நாடகத்தில் மிகப் பெரிய சோஷலிஸ்ட் தலைவராக இருந்த ஷாந்தவேரி கோபால கௌடாவின் தலைமை

யில் சீடராக இருந்தவர். எமர்ஜென்சி காலத்தில் சிறைவாசம் அனுபவித்திருக்கிறார். 67-ல் முதன் முதலாகப் பாராளுமன்றத்துக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டு, அங்கே சென்று கன்னடத்தில் பேசினார். அதன்படி பாராளுமன்றத்தில் ஒலித்த முதல் கன்னடக் குரல் இவருடையதுதான்.

கவிதைகளில் மிகவும் ஈடுபாடு கொண்டவர் படேல். சென்ற ஆண்டு ஞானபீட விருதுபெற்ற யு.ஆர். அனந்தமூர்த்தி, பிரபல கன்னடக் கவிஞர் கோபால கிருஷ்ண அடிகா, இவர்கள்தாம் இன்றைய கர்நாடக முதல்வரின் நெருங்கிய நண்பர் குழு.

யு.ஆர். அனந்தமூர்த்தியின் 'அவஸ்தே' என்ற நாவல் படமாக்கப்பட்ட போது, அந்தத் திரைப் படத்தில் ஒரு முக்கியமான வேடத்தில் நடித்தார் படேல். அவர் ஏற்று நடித்தது 'முதலமைச்சர் வேடம்!'

நகைச்சுவை உணர்ச்சி கொண்ட ஜே.எச். படேல் நறுக்குத் தெறித்தாற்போல் பேசுவதிலும் வல்லவர். சமயங்களில் சுற்றி வளைத்து உருவகமாகவும் பேசுவார்.

ஒரே கட்சியைச் சேர்ந்தவர்களாக இருந்தாலும் எதிரெதிர் துருவங்களாக இருக்கும் தேவேகௌடாவும் ஜே.எச். படேலும் மாநில நலன் என்று வரும்போது ஒன்றாக இணைந்து கைகோத்துக் கொள்வார்கள் என்று நம்பப்படுகிறது. தேவேகௌடாவின் புகழ்பெற்ற நிகழ்ச்சிகளில் ஒன்று ஜனதா தர்ஷன் – மக்களிடம் 'அரசாங்கமே நேரடியாகச் சென்று அவர்களின் குறைகளைக் கேட்டறிந்து நிவர்த்தி செய்வது. இதனைத் தொடர்வீர்களா என்று கேட்டதற்கு, "இதனை என்னால் தொடர முடியாது. ஏனெனில் தேவேகௌடாவிடம் இருந்த உடல் வலு (ஸ்டாமினா) என்னிடம் கிடையாது" என்றார் படேல்!

"இனிமேல் நீங்கள் கர்நாடக நலனுக்காக அடிக்கடி டெல்லி போக வேண்டியிருக்குமே..." என்றார் ஒரு நிருபர்.

சற்றும் யோசிக்காமல் ஜே.எச். படேல் அளித்த பதில் : "டெல்லியே கர்நாடகத்திற்கு வரும்."

பெங்களூரிலிருந்து :

**அமுதவன்**

## சஞ்சீவரெட்டி :

# கடைசி வரை இருந்த ஏக்கம்!

**மறைந்த நீலம் சஞ்சீவரெட்டியைப் பற்றிச் சொல்கிறார் மூத்த பத்திரிகையாளர் பி.எஸ்.ஆர். கிருஷ்ணா....**

- வறண்ட ராயலசீமா பகுதியில் உள்ள அனந்தபூர் நகரத்துக்கு அருகில் இருக்கும் இல்லூர்தான் சஞ்சீவரெட்டியின் சொந்த ஊர். அவர் குடும்பம் மிகப் பெரிய பணக்கார விவசாயக் குடும்பம். நூற்றுக்கணக்கான ஏக்கர்களுக்குச் சொந்தக்காரர்கள் அவர்கள்!
- ராயலசீமா பகுதி புறக்கணிக்கப்படுவது குறித்து அவருக்கு மிகுந்த வருத்தம். கிருஷ்ணா, கோதாவரி நதிகளால் வளம்கொழிக்கும் கடற்கரையோர ஆந்திர மாவட்டங்களைப் போல தமது பகுதி மாறாதா என்ற ஏக்கம் கடைசி வரை அவருக்கு இருந்தது!
- ஆந்திரா தனி மாநிலமாக மாறிய போது, மிகவும் போராடி, மூன்று வருட காலம் கர்நூல் நகரை தலைநகரமாக்கினார் சஞ்சீவரெட்டி.



- இருமுறை ஆந்திர முதல்வராக இருந்திருக்கிறார். அவர் காலத்தில் கட்டப்பட்டதுதான் விஜயவாடாவில் கிருஷ்ணா நதியின் மேலுள்ள பிரகாசம் பாரேஜ் (சாலை வசதியுடன் கூடிய அணைக்கட்டு) கிருஷ்ணா தண்ணீரை ராயலசீமா பகுதிக்கு எடுத்துச் செல்ல கர்நூல் – கடப்பா கால்வாய் வெட்டப்பட்டது. இன்றும் ரெட்டிகாருவை வாய் நிறைய வாழ்த்துகிறார்கள் அந்தப் பகுதி விவசாயிகள்.
- காங்கிரஸ் தலைவர், மத்திய மந்திரி, முதல்வர், சபாநாயகர், ஜனாதிபதி என்று பல பதவிகள் வகித்திருந்தாலும் ஒன்றைத் தவிர வேறு எதிலும் முழு பதவிக் காலத்தை முடித்ததில்லை அவர். அந்த ஒன்று – ஜனாதிபதி பதவி.
- 1977 தேர்தலில் ரெட்டிகாரு இருந்த ஜனதா கட்சி 41 தொகுதிகளில் தோற்றது. ஆனால் அவர் வெற்றி பெற்றார். அப்போது அவர் போட்டியிட்ட தொகுதி : நந்தியால்!
- காமராஜரின் அத்யந்த நண்பர். சென்னை வந்து விட்டால் அவரை சந்திக்காமல் ஊர் திரும்ப மாட்டார். கை நிறைய வேர்க்கடலையை நிரப்பிக் கொறித்துக் கொண்டே இருவரும் தாம்பரம், ஆவடி என்று காரில் பேசிக் கொண்டே சென்று திரும்புவார்கள்.
- அதிகாரிகள் தப்பித் தவறிக் கூட தவறு செய்து விட முடியாது! முதல்வராக இருந்த போது நிர்வாகத்தில் மிகவும் கண்டிப்பாக இருந்தவர்.

சந்திப்பு : **ஸ்ரீநிவாசன்**

# ஆகாயச் சிறகுகள்

11

மேலாண்மை பொன்னுச்சாமி

**பா**ல்ச்சாமிக்கு ஏகப்பட்ட வேலைகள். கட்சிப் பணிகள் ஒரு பக்கம். புஞ்சைப் பணிகள் மறுபக்கம். நின்று மூச்சுவிட நேரமில்லை. ஓடியாடித் திரிந்தான். பருத்தி வியாபாரியைத் தேடித் திரிந்தான். டீக்கடையில் விசாரித்தான்.

"ஏவாரி வந்தாரா?"

"யாரு... பருத்தி ஏவாரியா?"

"ம்."

"இப்பத்தான் வந்துட்டுப் போனாரு... என்ன வெஷயம்?"

"பருத்தி எடை போடணும்!"

"ரேட்டு பேசியாச்சா?"

"அதெல்லாம் பேசியாச்சு. இன்னிக்கு எடை போடப் பேச்சு. அதாலே... கமிட்டிக் கூட்டத்துக்குப் போறதைக் கூடத் தள்ளி வைச்சேன். இந்தாளு என்னடான்னா... நம்மளை இழுத்தடிச்சு வேடிக்கை காட்டுறாரு."

பால்ச்சாமியிடம் துல்லியமாய்த் தெரிந்த சலிப்பு, முகத்தின் அதிருப்தி விறைப்பில் தெரிந்தது. நிலையற்று அலைபாயும் கண்ணில் மனச் சிடுசிடுப்பு.

"டீ போடவா?"

"வேண்டாம்..."

"புது மாப்பிள்ளை. பொண்டாட்டி கையாலே போடுற டீக்கு தனி மவுசுதான்!"

அந்தக் கேலியின் மெல்லிய சீண்டலில் இவனுள் மலர்கிற கூச்ச உணர்வு. முகத்தின் விறைப்பு மாறி, சட்டென்று கனிவின் குழைவாகிறது. அசட்டுச் சிரிப்பில் மகிழ்வின் பெருமிதம்.

"நீங்க வேற, சும்மாயிருங்கண்ணாச்சி" என்று ஏதோ ஒப்புக்கு முனங்கிய பால்ச்சாமி, "ஏவாரி வந்தா... வரச் சொல்லுங்க" என்று சப்தமாய்ச் சொல்லி விட்டு நகர்ந்தான்.

பருத்தி எப்படியும் ஏழெட்டு குவிண்டால் தேறும். பெரிய அம்பாரம். இருக்கிற செலவுகளை, சில்லறைக் கடன்களை மனசுக்குள் கணக்குப் போட்டான்.

'ஒரு ஜோடி கம்மல் வாங்கித் தரலாமா... பிரேமாவுக்கு?' பாசத்துடன் ஓடிய ஒரு மின்னல். அதன் சரேலென்ற வெளிச்சத்தில் மனசுக்குள் புலப்படுகிற மகிழ்ச்சிப் பூக்கள்.

கம்மலைப் பார்த்தால்... பிரேமா எப்படிப் பூரிப்பாள்? எவ்வளவு சந்தோஷப்படுவாள்? மனசுக்குள் பிரேமாவின் பூ முகத்து மலர்ச்சி.

உள்ளங்கையில் அந்தத் தங்கக் கம்மலின் மின்



ஸல். புரட்டிப் புரட்டி பார்க்கிறான். முகத்தில் குழந்தையின் குதூகலம்.

"இது எனக்குத்தானா...?"

"ம்!"

"நெசம்மா?"

"நெசந்தான். நல்லாயிருக்கா?"

"கம்மலும் நல்லாயிருக்கு."

"வேற?"

"வாங்கித் தரணும்னு ஆசைப்பட்ட ஒங்க மனசும் நல்லாயிருக்கு!"

விரியும் காட்சியில் பரவசப்படுகிற பிரேமா. அவன் முகத்தில் கனவின் ஒளி.

வேப்பமரத்து நிழலில் சைக்கிள். அதன் சிவப்புச் சீட்டில் நிற்கிற செவலைச் சேவல். வாலைத் தாழ்த்தி உடம்பை விறைக்கிற அதன் பாங்கு. எச்சமிடப் போகுதா? "ச்சூச்சூ..." என்று ஓடிப் போய் பத்துகிற பால்ச்சாமி. பதற்றத்தில் சிறகடிக்கக் கூட முடியாமல் தவ்வி ஓடுகிற சேவல்.

இவன் சத்தம் கேட்டு குழப்பமாய் எட்டிப் பார்க்கிற பிரேமா. அவள் கையெல்லாம் சோப்பு நுரை. காலடிச் சேலையின் முன் நுனியை மேலே இடுப்பில் எடுத்துச் சொருகியிருக்கிறாள். இடது முழங்காலின் பளீரிடல்.

"அட... நீங்கதானா?" என்ற ஆசுவாசப்பட்ட குரலில் பிரேமா.

"ஒண்ணுமில்லே. சைக்கிள் மேலே சேவல்





● கைக்குட்டை சதுர வடிவில் இருக்க வேண்டு மென 1785-ல் மன்னர் பதினாறாம் லூயி சட்டமியற் றினார். வேறு அளவுகளில் கைக்குட்டை தைத்தால் கடுந்தண்டனை வழங்கப்படுமென அறிவிக்கப்பட்ட தாம். இச் சட்டத்திற்கு முன்பு கைக்குட்டைகள் பல வடிவங்களில் தயாரிக்கப்பட்டு வந்ததாம்!

ஆதாரம் : 'உலகச் செய்திகள் ஆயிரம்'

தகவல் : நெ. இராமன்

---

நின்னுச்சு. அதைப் பத்துனேன்!"

"அதுக்கு இந்தக் கத்தலா...?" என்ற செல்லக் கண்டிப்போடு உள்ளே திரும்பினாள். பின் தொடர்ந்தான். சட்டையைக் கழற்றிப் போட்டு பின்பக்கமாய்ப் போனான். பலகைக் கல். அகலமான கருங்கல். அதில் நிறைய சட்டை துணிமணிகள். சோப்புப் போட்டு வைத்திருந் தாள். மிச்சத்துக்குப் போட்டுக் கொண்டிருந் தாள். இவனும் பக்கத்தில் வந்து உட்கார்ந்தான்.

"இங்க என்ன ஜோலி, ஒங்களுக்கு? போங்க உள்ளே."

"நானும் ஒனக்கு ஒத்தாசை பண்றேன். கூட மாட துணிகளை அலசுதேன்!" என்று சொல் லிக் கொண்டே அவளது சேலையை அள்ளிக் கும்மினான். பொத்பொத்தென்று கும்மி நகக்கி னான். அழுக்கும் நுரையுமாய் வழிந்தது.

"ஐயய்யோ... சும்மா இருங்க. இதைப் போட் டுட்டு எந்திரிங்க, மொதல்லே."

பதறிப் பதைத்துப் போய் அவன் கையி லிருந்த ஈரச் சேலையை பிடுங்கிப் போட்டாள். "ஒங்களுக்கு எதுக்கு இந்த ஜோலி? இது பொம் பளைங்க ஜோலி. போங்க அங்குட்டு. யாரும் பாத்தா... சிரிக்கப் போறாக!"

"சிரிக்கட்டும். சிரிப்புங்குறது நல்ல விஷயம் தானே? பிரேமா, பொம்பளைக வேலை, ஆம்ப ளைக வேலைன்னு தனித்தனியா பிரிக்கக் கூடாது. எல்லா வேலைகளையும் எல்லாரும் செய்யணும். அதான்... ஜனநாயகம்!"

"உங்க ஜனநாயகம், சமத்துவத்தையெல்லாம் வெளியே வைச்சுக்கங்க. வீட்டுக்குள்ளே கொண்டு வர வேண்டாம்!"

"இல்லே பிரேமா, ஆதிகாலத்துலே பொண் ணுக வேட்டைக்குப் போவாக, குலத்துக்கே தலை வியா இருப்பாக. அது தாய்வழிச் சமூகம்னு பேரு."

"ம்."

"கால்நடைகளைப் பழக்கி மாடுக, குதுரைக மந்தை மந்தையா வளர்க்க ஆரம்பிச்சு... நெலத் துல வெளைய வைச்ச தான்யத்தைத் தின்னு, பாலைக் குடிக்கப் பாத்த பெறகுதான்... பொண் ணுகளை அடிமையாக்கிட்டாக."

"எதுக்கு?"

"ஒழைக்குறதுக்கு நெறைய மனுசங்க தேவைப்பட்டாக. மனுசங்களைப் பெத்துக் குடுக்குற பொண்ணுகளை வீட்லேயே வைச்சு சீராட்டிச் சீராட்டிப் பூரிச்சாக. மாடுகன்னைப் பாத்துக்கிட்டு, வீட்டுலேயே இருந்து புள்ளை களைப் பெத்துக் குடுத்தா போதும்னு சொல் லிட்டாக."

"ம்."

"அதுக்குப் பெறகுதான் பொண்ணு வீட்டுப் பிராணியா மாறிப் போனா. புள்ளை பெறுகிற மிஷினா... காமப்பண்டமா மாறிட்டா."

"ம்."

"இப்பச் சொல்லு பிரேமா, ஒத்தைப் புள்ளை பெத்தா போதும்னு சர்க்காரே கெஞ்சுற இந்தக் காலத்துலேயும் வீட்டுப் பிராணியா மட்டும் பொண்ணு இருந்தா... அது என்ன நியாயம்? நாட்டுப் பிராணியா மாற வேண்டாமா? போட்டி போட்டுக்கிட்டு ஆணுக்குச் சமதையா பொண்ணு வெளியே வர வேண்டாமா? இப்ப வும் கூச்சப்பட்டுக்கிட்டு... பயந்துக்கிட்டு... பொம்பளைக ஜோலின்னு தனியா பிரிச்சுக் கிட்டு... வீட்டுக்குள்ளேயே அடைக்கோழி மாதிரி அடைஞ்சு கெடந்தா... எப்படி?"

பிரேமா சிரித்தாள். குனிந்து சோப்புப் போட்டுக் கொண்டே 'உம்' கொட்டியவள், சிரிப்புடன் நிமிர்ந்தாள். சிரிப்பில் உயிரில்லை.

"அங்க சுத்தி, இங்க சுத்தி கதை ஏங்கிட்டதா வந்து முடிக்கிகளா? இந்த 'ஊசி' போட்டு மாத் துற வேலையை வெளியேதான் வைச்சுக்கங்க. ஏங்கிட்டே வேண்டாம்!"

"ஏன்...? நீ பொண்ணு இல்லியா?"

"வேண்டாம்னா வேண்டாம். விட்டுடுங்க. பட்டது போதாதா?"

அவள் குரலில் சட்டென்று வந்த இறுக்கம். முகத்தில் வந்த மாற்றம். கவிந்த இருட்டு. கோபச் சிடுசிடுப்பு. சுடுபாலில் வாய் வைத்த பூனை, மோரைக் கண்டால் கூட பயந்து வெரு ளுமே... அப்படியொரு மிரட்சி.

அந்த மாற்றத்தை மனசால் உணர்ந்தாலும், அதைக் குழைவான சிரிப்பில் கடக்க முயற்சித்த பால்ச்சாமி, "இல்லே... பிரேமா... நா வந்து..."

"பேச்சை விடுங்கன்னா... விடுங்க. வேற பேச்சுப் பேசுங்க."

வெறுப்பும் கோபமுமாய்ச் சிடுசிடுத்து அவனை வெட்டிய பிரேமா. மனசின் இருகல் முறுகல், சோப்பை 'பரட், பரட்'ரென்று இழுக் கிற இழுப்பில் துல்லியமாய்த் தெரிந்தது.

உள்ளுக்குள் ஒடிந்து துவண்டு போன பால்ச்சாமி. அவனுக்குள் சூழ்ந்த சூன்யம். பேச

வாழ்க
வளமுடன் !

வளர்க
எங்களுடன் !!



# பர்பெக்ட்
# பெனிபிட் பண்ட் லிமிடெட்

**(மத்திய அரசால் அங்கீகரிக்கப்பட்ட 'நிதி' நிறுவனம்)**

*"In the service of providing Nidhi to the Needy"*

**தலைமை அலுவலகம்**
50, ஹால்ஸ் சாலை, எழும்பூர்
சென்னை - 600 008.
போன் : 8250296

**கிளை அலுவலகங்கள்**

**புரசைவாக்கம்**
69, புரசைவாக்கம் நெடுஞ்சாலை
சென்னை - 600 007.
போன் : 6414903

**அண்ணா நகர்**
W-110-3வது அவின்யு
(ரவுண்டானா அருகில்)
சென்னை - 600 040.
போன் : 6285387

**பிராட்வே**
202, பிராட்வே
(மண்ணடி அருகில்)
சென்னை - 600 108.
போன் : 5233099

**தி. நகர் :**
22, ரங்கநாதன் தெரு
தி. நகர், சென்னை - 600 017.
போன் : 4342789

**வேலை நேரம்**
வார நாட்கள் : 9.00a.m. to 5.30 p.m.
ஞாயிறு : 9.00a.m. to 12.30 p.m.

| பர்பெக்ட் 'FD' பாண்டு | | PBA |
|---|---|---|
| முதலீடு | காலம் | வட்டி விகிதம் |
| ரூ 50,000 | 5 வருடம் | 22% |

| பர்பெக்ட் 'RID' பாண்டு | | PBC |
|---|---|---|
| முதலீடு | காலம் | வட்டி விகிதம் |
| ரூ 25,000 | 5 வருடம் | ரூ 75,000/- |

| சீனியர் சிட்டிசன் 'FD' | | SCD |
|---|---|---|
| குறைந்த பட்ச முதலீடு | காலம் | வட்டி விகிதம் |
| ரூ 5,000 | 1 வருடம்<br>2 வருடம் | 20.5%<br>21% |

| சீனியர் சிட்டிசன் 'RID' | | SCC |
|---|---|---|
| குறைந்த பட்ச முதலீடு | காலம் | முதிர்வு தொகை |
| ரூ 5,000 | 1 வருடம்<br>2 வருடம்<br>3 வருடம்<br>40 மாதம் | ரூ 6,125<br>ரூ 7,505<br>ரூ 9,200<br>ரூ 10,000 |

| சுந்தரா பாண்டு | | PSB |
|---|---|---|
| குறைந்த பட்ச முதலீடு | காலம் | முதிர்வு தொகை |
| ரூ 6,000 | 10 வருடம்<br>15 வருடம்<br>18 வருடம் | ரூ 44,444/-<br>ரூ 1,11,111/-<br>ரூ 1,81,000/- |

சிறப்பு ஊக்கத்
தொகை

**1.5%**

குறைந்த பட்ச
முதலீடு
ரூ 5,000
காலம் 1வருடம்
16.6.96 முதல்
15.7.96 வரை

## இயக்குநர்கள் குழு

Dr. K. சுந்தரம் B.Sc., F.C.A., A.I.C.W.A, B.L., Ph.D.,
- நிதி மற்றும் வருமான வரி ஆலோசகர்
- இயக்குநர் - P.B. கன்ஸ்ட்ரக்ஷன் (இந்தியா) லிட்.

Dr. P.M. பழனி, M.D.,
- தலைவர் தி புரசைவாக்கம் பர்மனென்ட் பண்டு லிட்
- இயக்குநர் புரசைவாக்கம் சாந்தத சங்க நிதி லிட்

Dr. R. விவேகானந்தன், B.Com., M.B.A.,
- சேர்மன்-பார்க்டவுன் பெனிபிட் பண்டு லிட்
- இயக்குநர்- S.I.C-ஹயர் பர்ச்சேஸ் & லீசிங் லிட்

S. முரளி, B.Com., F.C.A., - தணிக்கையாளர்

கோமதி சுந்தரம், B.Sc., - இயக்குநர் - பார்க்டவுன் பெனிபிட் பண்டு லிட்

K. சத்தியநாராயணா, - தொழில்

R. லக்ஷ்மணசுவாமி B.A.(C.S.)., M.B.A
- இயக்குநர் S.I.C. குரூப்
- P.B. கன்ஸ்ட்ரக்ஷன் (இந்தியா) லிட்

| | | |
|---|---|---|
| இலவச வருமான வரி ஆலோசனை | நகை, வைப்புத் தொகை மற்றும் சென்னை மாநகராட்சி எல்லையை ஒட்டிய புறநகர் வீடுகளின் பேரிலும் கடன் வசதி | பரிமாற்றம் பங்கு தாரர்களுடன் மட்டும். |

வார்த்தைகளேயில்லாமல் ஓடி மறைந்த மாயம்.

இதற்கு மேல் ஏதாச்சும் பேசினால் 'அழுது விடுவானோ' என்ற நிலைமை.

கனத்த பெருமூச்சுடன் உள்ளே போன பால்சாமிக்குள் சுழன்ற வேதனையான நினைவுகள்.

'புள்ளையார் புடிக்கப் போய், குரங்காய் முடிஞ்ச கதை மாதிரியாகிப் போச்சு. என்னமோ நெனைச்சு அவளை உண்ணாவிரதத்துக்கு நிர்ப்பந்தம் பண்ணப் போய்... அது அவளை இயக்கத்துக்கே எதிரியாக்கிருச்சு. ச்சே!'

மனசுக்குள் நெருஞ்சி முள்ளாய் உறுத்துகிற நினைவுகள்.

FFரச் சேலையை அடித்துக் கும்மினாள் பிரேமா. அவளுக்குள் அந்த ராத்திரி. பால்சாமி இவளை 'உண்ணாவிரதத்துக்குக் கட்டாயமா போ' என்று சொல்லி விட்டுப் போன பயங்கர ராத்திரி. 'நிர்வாணமாய் தெருவில் பட்டப் பகலில் ஓடு' என்று சொல்லப்பட்டவளாய் துடித்த அந்த இரவு. தனிமையின் பயங்கரத்தில் தவித்த கொடுமை. சொல்லியழ ஆளில்லாமல் சூன்யமாய் உணர்ந்த அவலம். தாய் தகப்பனிடமும் போக முடியாது. பதைத்துக் கொண்டாயிற்று. 'நாதியற்றுப் போனோமே' என்று எண்ணி எண்ணிச் செத்த பயங்கரம்.

உண்ணாவிரதத்தில் மயங்கி விழுந்த பிறகு நடந்த சம்பவங்களை பலர் சொல்லக் கேட்டிருக்கிறாள், பிரேமா.

மயங்கிச் சரிந்தவுடன் பதைத்துப் போய் அலறிய உண்ணாவிரதப் பெண்கள். பதறிப் போய் உதவிக்கு ஓடிவந்த ஆண் தோழர்கள்.

எப்படி இவளை வீடு கொண்டு போக? தொட்டுத் தூக்கத் தயங்கித் திகைத்த பதற்ற நிமிடங்கள்.

தள்ளு வண்டியைக் கொண்டு வந்து... பெண்கள் இவளைத் தூக்கி அதில் போட... துவண்டு, பிரேதமாய்ச் சுருண்டு கிடந்த பிரேமாவை, எல்லோரும் வேடிக்கை பார்த்துப் பரிதாபப்பட... தள்ளு வண்டியைத் தள்ளி வந்தார்களாம்.

நாலு பேர் இருப்பது தெரிந்தாலே... தலையைக் காட்ட கூச்சப்படுகிற சுபாவமுள்ளவள், பிரேமா. அவள் துவண்டு போய் பரிதாபத்துக்குரிய பிச்சைப் பொருளாக... தெருவே, ஊரே திரண்டு சகல ஜனமும் பார்க்கிற வேடிக்கைப் பொருளாக...

நினைக்க நினைக்க உள்ளுக்குள் கூசிப் போகிறாள், பிரேமா. அவமானம் உயிரைப் பிடுங்கித் தின்கிறது. எத்தனை ஜென்மமெடுத்தாலும் ஆறாத புண்ணாக... அந்த நினைவு.

(தொடரும்)

# நாயைக் குளிப்பாட்டுவேன்!



•கருணாகரன் : "நீந்துவாரா?"

• நாயனார் : "ஆட்சேபணை இல்லை!"

கிளிப் ஹவுஸ். கேரள முதல்வர்கள் குடியிருக்கும் அரசாங்க இல்லத்தின் பெயர் தான் இது. கருணாகரன் முதல்வராயிருந்த போது, கார் விபத்து ஒன்றில் சிக்கினார். சிகிச்சையளித்த டாக்டர், அவர் தினமும் நீச்சல் பயிற்சி செய்வது அவசியம் என்று வலியுறுத்தவே, கிளிப் ஹவுஸில் நீச்சல் குளமொன்று கட்டப்பட்டது! இப்போது இங்கே குடிவந்திருக்கும் இ.கே.நாயனார், "கருணாகரன் வேண்டுமானால் தினமும் இந்த நீச்சல் குளத்தில் வந்து குளிக்கட்டும்; எனக்கு அதில் எந்தவித ஆட்சேபணையும் இல்லை. அப்படி அவர் வரவில்லையானால் என்னுடைய நாயைத் தான் இந்த நீச்சல் குளத்தில் குளிப்பாட்டுவேன்!" என்று தடாலடியாகக் கூறியது, காங்கிரஸ்காரர்களை மட்டுமல்ல; மார்க்சிஸ்ட் கட்சிக்காரர்களையும்கூட முகம் சுளிக்க வைத்திருக்கிறது!

●● திருவனந்தபுரம் மாநகராட்சித் தலைவர் சிவன்குட்டி. இவர் மார்க்சிஸ்ட் கட்சியைச் சேர்ந்தவர். துணைத் தலைவரான சதீஷன் இந்திய கம்யூனிஸ்ட் கட்சிக்காரர். மாநகராட்சியில் நடப்பது இரு கட்சிகளின் கூட்டணி ஆட்சி. சில மாதங்களுக்கு முன்பு சிவன்குட்டியின் சர்வாதிகாரப் போக்கைக் கண்டித்து சதீஷன் தமது பதவியை ராஜினாமா செய்தார். அவரது கட்சி மேலிடம் தலையிட்டு, அவரது ராஜினாமாவைத் திரும்பப் பெறச் செய்தது. இதை மனத்தில் கொண்ட மார்க்சிஸ்ட் கட்சி, சதீஷனைப் பழி வாங்கத் தருணம் பார்த்துக் கொண்டிருந்தது. இந்நிலையில் தமது அலுவலகக் காரின் மூலம் அருகிலுள்ள பொன்முடி என்கிற மலை வாசஸ்தலத்துக்குப் பிக்னிக் போனார் சதீஷன். அலுவலகக் காரை சொந்த உல்லாசத்துக்குப் பயன் படுத்தியது தவறு அல்லவா! உடனே, இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் தலைமையிடம் சதீஷன் பற்றிப் புகார் செய்தது மார்க்சிஸ்ட் கட்சி. புகார் உண்மை தான் என்று தெரிய வரவே, சதீஷனைக் கட்சியிலிருந்து சஸ்பெண்ட் செய்ததோடு, அவரது துணை மேயர் பதவிக்கான ராஜினாமாவையும் எழுதி வாங்கிக் கொண்டது கட்சி மேலிடம்! இதையறிந்த மார்க்சிஸ்ட் கட்சி, பதறிப்போய் சதீஷன் மேல் எடுக்கப் பட்டுள்ள நடவடிக்கைகளை ரத்து செய்யும்படி இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியிடம் கோரிக்கை விடுத்திருக்கிறது. காரணம்? சதீஷனின் ஆதரவாளர்களுடைய ஆதரவு பறிபோய் விட்டால் சிவன்குட்டியின் மேயர் பதவிக்கே ஆபத்தாயிற்றே!

●● கேரளாவில் மின்வெட்டு அமலுக்கு வந்து விட்டது. இதன்படி, தபால் நிலையங்களுக்கும் 35 சத மின்வெட்டை அமல் படுத்தியுள்ளது மின்வாரியம். பொதுமக்களுக்குச் சேவை செய்யும் இடமாதலால் தபால் நிலையங்களுக்கான மின் வெட்டை ரத்து செய்யும்படி மின்துறைக்குக் கடிதம் எழுதியிருக்கிறார் தலைமை அஞ்சல் அதிகாரி! இந்நிலையில் கோழிக்கோட்டிலுள்ள தபால் நிலையம் 35 சத மின்வெட்டுக்கு அதிகமான மின்சாரத்தைச் செலவு செய்துவிட்டதாகக் கூறி மின் இணைப்பைத் துண்டித்து விட்டனர்! அதனால் கம்ப்யூட்டர் போன்ற உபகரணங்கள் இயங்காமல் வேலைகள் பாதித்துக் கிடக்கின்றன. அதிகமாகப் பயன்படுத்திய மின்சாரம் கணக்கில் கழிகிறவரை இந்தத் துண்டிப்பு இருக்குமாம்!

திருவனந்தபுரத்திலிருந்து : எஸ்.எஸ்.மணி









1996 ஜூன் 23
தாது ஆனி 9
மலர் : 54
இதழ் : 47

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## பிரதமர் உதிர்த்த உறுதிமொழிகள்!

பிரதமருக்கு இருமுறை வாழ்த்துத் தெரிவிக்க வேண்டியிருக்கிறது!

முதல் வாழ்த்து, ஓர் இக்கட்டான சந்தர்ப்பத்தில் சாமர்த்தியமாகவும் துணிவுடனும் பேசியதற்காக.

ஆதரவுக் கட்சியான காங்கிரஸின் தலைவர் நரசிம்மராவைச் சுற்றி வட்டமிட்ட ஊழல் புகார்கள், ஒரு வியூகமாகவே உருமாறியிருக்கின்றன. இந்தச் சூழ்நிலையில், 'கர்நாடகத்தில் நான் ஊழலை அனுமதித்ததில்லை; மைய அரசிலும் அதை அனுமதிக்க மாட்டேன்' என்று பேசியிருக்கிறார் தேவேகௌடா. 'நான் எத்தனை நாட்கள் ஆட்சியில் இருக்கிறேன் என்பது முக்கியமில்லை; எப்படி ஆட்சி செய்கிறேன் என்பதே முக்கியம்' என்றும் அவர் அறிவித்திருக்கிறார்! சட்டப்படி காரியங்கள் நடக்கும் என்று உத்தரவாதமும் அளித்திருக்கிறார். காங்கிரஸின் ஆதரவை இழந்து விடுவோமோ என்ற அச்சமின்றி இவ்வளவு மன உறுதியுடன் அவர் பேசியமைக்கு முதல் வாழ்த்து.

பி.ஜே.பி. செய்த இடையூறுகளிடையே நாடாளுமன்றத்தில் நம்பிக்கை வாக்கெடுப்பு நடத்தி அதில் வெற்றியும் கண்டதற்காக நமது இரண்டாவது வாழ்த்து.

வாழ்த்தும் நேரத்தில் பிரதமரை எச்சரிக்கவும் வேண்டியுள்ளது.

அரசாங்கம் எதிர்பார்க்கும் வருமானம் முழுவதும் வட்டி செலுத்துவதற்கே சரியாகப் போய் விடும் என்று ரிசர்வ் வங்கி தனது அறிக்கையில் கூறியிருக்கிறது. கடுமையான நிதிப் பற்றாக்குறை ஏற்படும் என்றும் எச்சரித்துள்ளது. உற்பத்திக்கு உதவாத செலவினங்களைக் கண்ணை மூடிக் கொண்டு குறைத்தாலொழிய நிலைமை முன்னேறாது. இதைச் சாதிக்க நிதியமைச்சர் ப. சிதம்பரம்




மந்திரக்கோல் ஏந்திய மாயாஜாலக்காரரைப் போல் வித்தை நிகழ்த்தினால்தான் உண்டு!

பொதுச் செயல் திட்டம், (common minimum programme) அயல்நாட்டு முதலீடுகள் குறித்த கொள்கை மாற்றத்தையும் உள்ளடக்கியிருக்கிறது. அவசியமற்றவையாகக் கருதப்படும் தொழில் முயற்சிகளை அந்நியர்கள் நம் நாட்டில் தொடங்குவது இனி சுலபமாக இராது. முழு சுதந்தரத்துக்குப் பழக்கப்பட்டுப் போன அயல்நாட்டவர் வரவேற்கக்கூடிய மாற்றம் அல்ல இது. 'எங்கள் குளிர்பானங்கள் உங்களுக்கு வேண்டாமெனில், எங்கள் நவீன தொழில் நுட்பமும் உங்களுக்குக் கிடைக்காது' என்று அவர்கள் தர்க்கத்தில் இறங்குவார்கள். கௌடா அரசின் இந்தக் கொள்கை முடிவு, சிங்கப்பூர் முதலீட்டாளர்களிடையே ஏற்கெனவே சலசலப்பை ஏற்படுத்தி விட்டது.

உற்பத்தி, ஏற்றுமதி ஆகியவற்றைப் பெருக்குவதன் மூலம் அந்நியச் செலாவணி வருவாயை அதிகரிப்பதுதான் பிரச்னைக்குத் தீர்வேயொழிய, இதைப் போன்ற பாரபட்சக் கொள்கையல்ல.

நிதிக் கொள்கை ஸ்திரப்பட்டு முன்னேற்றம் உண்டாக அரசாங்கம் நிலையாக இருத்தல் அவசியமாகிறது. நரசிம்மராவின் தலைமையில் காங்கிரஸ் கட்சி நீடிப்பது மத்திய அரசுக்கு ஓயாத அச்சுறுத்தலாகவே இருக்கும். எனவே ராவ் ஆதரவாளர்களை ஒதுக்கி, இதர காங்கிரஸ்காரர்களை ஒருங்கிணைந்து அவர்களுடைய ஆதரவைப் பெறுவதில் முழு சாமர்த்தியத்தையும் பிரதமர் காட்ட வேண்டும்.

## முதல்வர் உதிர்த்த பொன்மொழிகள்!

'மதுபான வகைகள் மீதான வரியினை வசூலிக்காமல் (vend fee) மாநில கஜானாவுக்கு 350 கோடி ரூபாய் இழப்பை உண்டாக்கியிருக்கிறார் ஜெயலலிதா' என்று சுட்டிக்காட்டியதுடன் நின்று விடவில்லை முதல்வர்... அது எங்கே போச்சு என்று தெளிவாக்கி, உடனடியாக அந்த வரியை அமுலுக்குக் கொண்டு வந்தும் விட்டார். அரசுக்குச் சுளையாக வருமானம்



கிடைத்திருக்கிறது.

புதிய தலைமைச் செயலராக நம்பியார் பொறுப்பேற்க, சென்னையில் கலெக்டர்களையும் காவல் துறை உயர் அதிகாரிகளையும் அழைத்து மாநாடு நடத்தியிருக்கிறார் முதல்வர்.

- மக்களுடன் பழகி, பிரச்னைகள் வருமுன் காக்கும் அணுகுமுறையை அதிகாரிகள் மேற்கொள்ள வேண்டும்.
- உயர் அதிகாரிகள் சந்தேகத்துக்கப்பாற்பட்டவர்களாக இருந்தால்தான் கீழ் மட்டத்திலும் நேர்மை நிலவும்.
- கோப்புகள் சிவப்பு நாடாவில் கட்டப்பட்டு உறங்கிக் கொண்டிருக்கிற போது, ஊழல் எழுந்து உட்கார்ந்து ஊர் சுற்றக் கிளம்பி விடுகிறது.
- காவல் நிலையங்கள் குற்றவாளிகளைக் கண்டிப்பதற்காகவே தவிர தண்டிப்பதற்காக அல்ல.
- நிர்வாகம் தொலைவிலே இருக்கிற போது பிரச்னைகள் நெருங்கி வந்து விடுகின்றன.
- கள்ளச் சாராயத்தால் நோயுற்றவர்களைக் கண்டுபிடிப்பது காவல் துறையின் பங்கு; அதற்குச் சிகிச்சை அளிப்பது நிர்வாகத்தின் கடமை.

...என்று ஏராளமான நிர்வாகப் பொன்மொழிகளை உருவாக்கி, பட்டியலிட்டுத் தந்திருக்கிறார் முதல்வர்.

ஆனால் ஒரே ஒரு முக்கியமான பொன்மொழி பட்டியலிலிருந்து விடுபட்டுப் போயிருக்கிறது.

'கட்சித் தலையீடே ஆட்சியின் அழிவுக்கு ஆரம்பம்' என்பது அந்த எச்சரிக்கைப் பொன்மொழி!

கடந்த ஆட்சியில், உயர் மட்டத்திலிருந்து அடி மட்டம் வரை தாராளமாக நடந்த இந்தத் தவறு மீண்டும் அரங்கேறாமல் இருக்க வேண்டுமானால், முதல்வர், கலெக்டர்கள், காவல் துறையினர் கூட்டம் நடத்தியது போல் கட்சிக் கூட்டத்தையும் அவ்வப்போது நடத்த வேண்டும். தொண்டர்களையும் கட்சி நிர்வாகிகளையும் எச்சரித்து வைக்க வேண்டும். நல்லாட்சிக்கு இதுவே உத்தரவாதம் அளிக்கும்.

*"தேர்தலில் கட்சி தோற்பதற்கு எங்கள் கட்சிக் காரர்கள் செய்த குழிபறிப்பு வேலையும் ஒரு காரணம். தங்கள் மீதுள்ள தவறை திசை திருப்ப எந்தத் தவறும் செய்யாத ஒரு நிரபராதியான சசிகலாவை பலிகடா ஆக்குகிறார்கள்!" என்று சொல்லியிருக்கிறார் ஜெ. ஆனால் கட்சியிலுள்ள சாதாரண தொண்டர்கள் முதல், வி.ஐ.பிக்கள் வரை என்ன நினைக்கிறார்கள்? பலரையும் சந்தித்துப் பேசிய போது....*

# சசிகலா என்றாலே அப்படியொரு பயம்!

அ.தி.மு.க. தலைமை நிலைய வாயிலில் அந்த கிளைக் கழக செயலாளரைச் சந்தித்தோம். வ.உ.சி. மாவட்டத்தைச் சேர்ந்த அவர், தோல்விக் கான காரணங்களை 'அம்மா'விடம் எடுத்துச் சொல்ல வந்திருந்தார்.

"நீங்கள் எடுத்துச் சொன்ன காரணங்கள் என்னென்ன?"

"மந்திரிகள் அடித்த கொள்ளைகள், அதிகார துஷ்பிரயோகங்கள், ஆசிட் வீச்சு சம்பவங்கள், தொண்டர்களை அரவணைத்துச் செல்லாத தலைமை என்று பல்வேறு விஷயங்களை எடுத்துச் சொன்னோம்..."

*"சசிகலா மற்றும் அவரது குடும்பம் அடித்த லூட்டியால் ஏற்பட்ட தோல்வி இது என்று உங்கள் கட்சியில் சொல்லிக் கொள்கிறார்களே! அதைச் சொல்லவில்லையா?"*

"எல்லாரும் 'அந்த' விஷயத்தைப் பேசலீங்க! வளர்ப்பு மகன் கல்யாணம், நகைக்கடையாக சசிகலா ஜொலித்தது போன்றவை தோல்விக்கான காரணங்களில் சில என்கிற ரீதியில் ஒன்றிரண்டு பேர்தான் பேசினோம். 'சசிகலாவையும் என்னையும் யாரும் பிரிக்க முடியாது; இது பற்றிப் பேச யாருக்கும் உரிமை கிடையாது' என்று அம்மாவே சொல்லி விட்ட பிறகு பேசி என்னங்க பயன்?" என்றார் அந்த மாவட்டப் பிரமுகர்.



இதுதான் நிலைமை. வெளியில் தொண்டர்களோ அல்லது, கழகப் பிரமுகர்களோ அவர்களுக்குள் பேசிக் கொள்ளும் போது 'சின்னம்மா'தான் தோல்விக்கு முழுக்காரணம் என்று ஆவேசத்துடன் பேசிக் கொள்கிறார்கள். ஆனால் இது வரை நடந்த மூன்று மாவட்டத் தொண்டர்களின் சந்திப்பின் போது கூட சசிகலா பற்றிப் புகார் சொல்லியவர்களை விரல் விட்டு எண்ணி விடலாம். இது ஏன்? இவ்வளவு பெரிய மாபெரும் தோல்விக்குப் பிறகும் ரத்தத்தின் ரத்தங்கள் தலைமையைக் கண்டு அடங்கிக் கைகட்டி வாய் பொத்தி நிற்பது ஏன்?

"ரொம்ப சிம்பிள் சார்" என்று நம்மிடம் விளக்கினார் அந்த மாஜி அமைச்சர்.

"இன்று வேறு யாருக்குக் கட்சியில் அவ்வளவு செல்வாக்கு இருக்கிறது? சுவரை வைத்துத்தானே சித்திரம். நான்கு சட்டமன்ற உறுப்பினர்களே தேர்ந்தெடுக்கப்பட்ட போதும் 27 சத வீத வோட்டு வாங்கியிருக்கிறோம். இதற்கு யார் காரணம்? எங்கள் முகத்தைப் பார்த்தா வோட்டு போட்டார்கள்? அப்படி யாராவது நினைத்துக் கொண்டார்களென்றால் அது கடைந்தெடுத்த முட்டாள்தனம். எனவே தோல்விக்குக் காரணம் சசிகலாவாகவே இருந்தாலும், இந்தச் சூழ்நிலையில், இதன் காரணமாக ஜெ.வை பலவீனமாக்குவதில் கட்சிக்கு எந்தப் பயனும் இடையாது!" என்றார் அவர்.

"அப்படியென்றால் சசிகலாவை குறைகூறி எஸ்.டி.எஸ். கூட கடிதம் எழுதினாரே?"

லேசாகச் சிரித்தார் அவர்.

"சசிகலாவுக்கு மிகவும் வேண்டியவர் எஸ்.டி.எஸ். என்று கட்சியில் எல்லோருக்குமே தெரியும். தோல்விக்குப் பிறகு தலைமைக் கழகம் பக்கம் தலைவைக்கும்போதெல்லாம் அவரைத் தாக்கி தொண்டர்கள் கோஷம் போடுவதைக் கண்டதும் 'ஊரோடு ஒத்து வாழ்' கதையாக சசிகலாவைக் குறைசொல்லிக் கடிதம் எழுதி விட்டார். அப்படி ஒரு கடிதம் எழுதினால் தொண்டர்களுக்குத் தன் மேலுள்ள கோபம் குறையும் என்று அவர் நினைத்தார்."

'என் குடும்பத் தேவைகள் தவிர கட்சி விஷயத்திலோ ஆட்சி விவகாரங்களிலோ சசிகலா தலையிட்டதேயில்லை!' என்று ஜெ. சொன்னாலும் உண்மை நிலை என்ன?

"அ.தி.மு.க.வில் five men army என்று ஒரு குழு உண்டு. எஸ்.டி.எஸ்., கண்ணப்பன், செங்கோட்டையன், ரகுபதி, சத்திய மூர்த்தி ஆகியோர்தான் இவர்கள். பல விஷயங்களை ஜெயலலிதாவிடம் கட்சிக்காரர்கள் சொல்ல முடியாமல் போனதற்கு இவர்கள்தான் காரணம். சசிகலாவை எதிர்ப்பது போல் இவர்கள் இன்று பாவ்லா காட்டினாலும், உண்மையில் அந்த மன்னார்குடி கூட்டத்துக்குக் கோடி கோடியாகப் பணம் பண்ண பக்கபலமாய் இருந்து கட்சிப் பெயரை நாறடித்தவர்கள் இவர்கள்தான்!" என்று சொன்னார் மற்றொரு முன்னாள் அமைச்சர்.

அந்தக் கூட்டத்தைத் தவிர வேறு யாரும் சம்பாதிக்கவில்லையா என்ன?

"65,000 கிளைக் கழக செயலாளர்கள் முதல் மேல் மட்டத்திலுள்ள கட்சிப் பிரமுகர்கள் வரை எல்லோருமே சம்பாதித்தார்கள். இன்னமும் சொல்லப் போனால் கிராம அளவில் பொதுப் பணித் துறை வேலைகளை கிளைக் கழகச் செயலாளர்களுக்குத்தான் கொடுக்க வேண்டும் என்று எழுதப்படாத விதியே எங்கள் ஆட்சியில் போடப்பட்டிருந்தது.



## சசிகலா பற்றி கட்சிக்காரர்கள்!

பஞ்சைப்பராரியாக இருந்த கிளைக்கழக செயலாளர்கள் காண்ட்ராக்ட் மூலம் தாராளமாகச் சம்பாதித்து ராஜ்தூத், செயின், அம்மா பட மோதிரம், வீடு என்று வசதிகளை பெருக்கிக் கொள்வதைப் பார்த்த உள்ளூர் மக்கள் கட்சியின் மீது வெறுப்படைந்து போனார்கள். இதுவும் தோல்விக்கான முக்கியக் காரணங்களில் ஒன்று" என்றார் மந்திரியாக இருந்த போது ஊழலில் சிக்கிய அவர்.

"அரசு ஊழியர்கள் எங்கள் மீது கடும் வெறுப்பில் இருந்தார்கள். காரணம் சசிகலாதான்!" என்றார் மாவட்டச் செயலாளர் ஒருவர்.

எப்படி?

## FOR THE ATTENTION OF OUR READERS...

Further to the box item appearing in page 36 of KALKI issue dated 9.6.'96, we are glad to inform our readers that an amicable settlement has been reached, and that KALKI INTERLINK PVT LTD. have agreed to change their name to VAISHALI INTERLINK PVT LTD.

The change in name will be effected as early as possible by them, but within 30 to 40 days time.

The KALKI GROUP OF MAGAZINES appreciate this gesture and wishes VAISHALI INTERLINK PVT. LTD. all the best in their endeavours.

Publisher,
KALKI
47, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal,
Madras - 600 097.

"ஒரு குறிப்பிட்ட வகுப்பினர்தான் கோட்டையிலும், மாவட்டங்களிலும் முக்கியப் பொறுப்பில் வைக்கப்பட்டனர். எங்கள் மாவட்டத்தில் அதிகாரி ஒருவர் ஊழியரை அடித்து விட்டார். அவரை மாற்ற வேண்டும் என்று பல கடிதங்கள் எழுதியும் அம்மா ஒரு நடவடிக்கையும் எடுக்கவில்லை. பின்பு ஒரு நாள் முதல்வர் அலுவலக ஊழியரைச் சந்தித்து விசாரித்த போது, அந்தக் கடிதங்களை செயலாளர் (இவரும் சசிகலா வகையறாதானாம்) கிழித்துப் போட்டு விட்டார் என்று கூறினார். ஏதோ ஒரு குறிப்பிட்ட குடும்பத்துக்காகவும், அவர்களது வகுப்பைச் சேர்ந்தவர்களுக்குமாகத்தான் அரசு ஐந்து வருடம் நடந்ததோ என்று நினைக்கத் தோன்றுகிறது..." என்றார் அவர். இந்த ஒரு காரணத்தால் மற்ற வகுப்பு ஊழியர்கள் அனைவரும் ஒன்றுபட்டு எரிச்சலில் இருந்தார்களாம்.

"சசிகலா இல்லாமல் ஜெயலலிதாவால் இயங்க முடியாது என்பதை நன்கு புரிந்து கொண்ட சிலர்தான் சசிகலா எதிர்ப்புக் கோஷத்தை வலுவாக்கிக் கொண்டிருக்கிறார்கள். இதே போக்கு நீடித்தால் திடீர் முடிவுகளுக்குப் பேர் போன ஜெ., அரசியல் துறவறத்தை மேற்கொள்வார் என்ற நப்பாசை சிலருக்கு இருக்கலாம்" என்றார் ஜெயலலிதாவை நன்கு அறிந்த போயஸ் தோட்டத்துப் பழைய ஊழியர் ஒருவர்.

தமக்கெதிராக எழுப்பப்படும் சூறாவளிகளைச் சந்திக்க ஜெ. முற்றிலும் தயார் நிலையில் இருக்கிறார் என்றுதான் சொல்ல வேண்டும். மனக் கசப்போடு இருந்த கே.ஏ.கேவை வரவழைத்து சமாதானப்படுத்தியிருக்கிறார். பி.ஹெச். பாண்டியன் போன்று விவரமுள்ளவர்களை கன்ஸல்ட் செய்கிறார். "உங்களால்தான் என் பெயர் ரிப்பேர் ஆனது. மனச்சாட்சியோடு சொல்லுங்கள். நான் உங்களிடம் என்றைக்காவது வாய்திறந்து பணம் கேட்டிருக்கிறேனா?" என்று ஜெ. சமீபத்தில் மாஜி அமைச்சர்களிடம் புலம்பியிருக்கிறார்!

கண்ணப்பன் போன்றோர் இனி வீட்டுப் பக்கம் தலைகாட்ட வேண்டாமென்றும் எச்சரிக்கை விட்டிருக்கிறாராம். திருநாவுக்கரசு, முத்துசாமி போன்றோரை தற்போது நம்புகிறார் ஜெ.

மற்றவர்களிடம் எப்படியோ இருக்கட்டும், கட்சியில் இவ்வளவு பிரச்னைகள் வரக் காரணமாக இருந்த சசிகலாவை போயஸ் தோட்டத்தை விட்டுத் துரத்த ஜெ. தயங்குவதேன்? இதுதான் பலரையும் குடைந்து கொண்டிருக்கும் கேள்வி.

"நல்லா சொன்னீங்க, போங்க! இந்தச் சமயத்தில் அந்தம்மாவை வெளியே தள்ளினால், சட்டப்படி நடவடிக்கை எடுக்க முனைந்துள்ள பல்வேறு துறையினரும் தீவிர விசாரணையில் இறங்கும் போது, 'எல்லாம் அந்தம்மா (ஜெ.) சொல்லித்தான் நாங்கள் செய்தோம்; வளர்ப்பு மகனாக சுதாகரனை தத்து எடுத்துக்கிட்டதே அதற்காகத்தான்' என்று அவர்களிடம் எழுதிக் கொடுத்து விட்டால் என்ன செய்வது? அதனால்தான் சசிகலாவை வெளியே அனுப்பத் தயங்கிக் கொண்டிருக்கிறார் ஜெ." என்றார் தேர்தலில் சீட்டு கிடைக்காத இன்னொரு மாஜி அமைச்சர்.

இருப்பினும், அ.தி.மு.க. பொதுக்குழு கூட்டி அதில் சசிகலாவை வெளியேற்றும் தீர்மானத்தைக் கொண்டு வர சிலர் முனைந்திருக்கிறார்கள். அவர்கள் ஆர்.எம்.வீயைத் தொடர்பு கொண்டு அண்டர்கிரவுண்ட் வேலையிலும் இறங்கியிருக்கிறார்கள். கட்சியின் அழுத்தத்தைத் தாங்காமல் தலைமைப் பொறுப்பைத் தக்கவைத்துக் கொள்ள ஒருவேளை சசிகலாவை ஓரங்கட்டும் முயற்சியில் ஜெ. இறங்கினாலும் இறங்கலாம் என்கிற எண்ணம் கூட சிலரிடம் இருக்கத்தான் செய்கிறது. ஆனாலும் பயம்தான் நிறையப் பேரிடம் இருக்கிறது!

- ப்ரியன்

அட்டை வண்ணப்படம், படங்கள் :
**பேஜர் கே. மூர்த்தி**

# ஒலிம்பிக் போட்டியா? உல்லாசப் பயணமா?

"ஹாக்கி மட்டையை வைத்துக் கொண்டு இந்திய வீரர் த்யான் சந்த் செய்ய இருக்கும் வீரதீரக் காட்சிகளைக் கண்டு களியுங்கள்!'' என்று விளம்பரம் செய்தார்கள். எப்போது...? 1935 இல் பெர்லினில் ஒலிம்பிக்ஸ் நடந்த போது! அந்த அளவுக்கு ஹாக்கியில் (மட்டுமாவது) இந்தியா புகழ் பெற்றிருந்த காலம் அது.

சுதந்தரம் அடைந்த பிறகு அன்றைய பிரதமர் ஜவாஹர்லால் நேரு விளையாட்டு விஷயத்தில் ரொம்பவே தாராளம் காட்டினார். 1948 ல் லண்டனில் நடைபெற்ற ஒலிம்பிக் பந்தயத் திற்கு இந்தியாவிலிருந்து ஒரு சின்னப் படையே அனுப்பி வைக்கப்பட்டது. இதில் வேடிக்கை என்னவென்றால் ஒரு கையை இழந்த ஒருவர் கூட குத்துச் சண்டைப் பிரிவில் இடம் பெற் றிருந்தார்! அவரும் லண்டனுக்கு ஜாலியாகப் போய், போட்டியில் கலந்து கொள்ளாமலேயே திரும்பி வந்தார்.

நடந்தது இதுதான். நிறைய இந்திய விளையாட்டு வீரர்கள் கலந்து கொள்ள வேண்டும் என்ற ஆசையில் முன்னாள் இந்திய சாம்பியன்களின் பெயர்களைக் குலுக்கல் முறையில் தேர்ந்தெடுக்க, இடையே ரயில் விபத்தொன்றில் தமது ஒரு கையை இழந்தவருக்கும் அடித்தது யோகம்!

இந்த வருட ஒலிம்பிக்ஸுக்கும் அறுபது விளையாட்டு வீரர்களை அனுப்ப இந்திய ஒலிம்பிக்ஸ் கூட்டமைப்பு தீர்மானித்திருக்கிறது. இவர்களில் ஹாக்கி வீரர்களான பதினாறு பேரை விட்டு விட்டால் மற்றவர்கள் ஏதோ பதக்கத்தைத் தட்டிக் கொண்டு வரக்கூடும் என்ற நம்பிக்கை யாருக்கும் இருப்பதாகத் தெரியவில்லை. ஒரு மில்கா சிங்கோ, ஒரு பி.டி. உஷாவோ இப்போதைக்கு இல்லை என்ற சூழலே நிலவுகிறது.

அது சரி, இப்படியிருந்தும் அறுபது பேரை நாம் ஏன் அனுப்ப வேண்டும்? காரணம் உண்டு என்கிறார்கள் சிலர். நமது ஒலிம்பிக் குழுவின் விதிகளின்படி விளையாட்டு வீரர்களில் 55 சதவீதம் அளவினாலான எண்ணிக்கையில் அவர்களின் கூடச் செல்பவர்களின் (அதாவது மானேஜர், அதிகாரி, பயிற்சியாளர், சமையற்காரர், வண்டி ஓட்டுனர் இப்படி) எண்ணிக்கை இருக்கலாம். அதாவது அறுபது விளையாட்டு வீரர்கள் போனால் அவர்களுடன் மேற்குறிப்பிட்ட பிரிவுகளில் 35 பேர் வரை போக அனுமதி உண்டு.

ஆக அதிகபட்ச அதிகாரிகளும், பயிற்சியாளர்களும் அட்லாண்டா வரை இலவசப் பயணம் செய்ய வேண்டுமென்றால் அதிகபட்ச எண்ணிக்கையில் விளையாட்டு வீரர்களை அனுப்புவது ஒரு வழி! 1976 ல் ம்யூனிச் ஒலிம்பிக்ஸிற்கு இங்கிருந்து ஒரு கூடுதல் பயிற்சியாளரை அனுப்ப அரசு மறந்து விட, அவர் 'சமையற்காரர்' என்ற லேபிளில் ம்யூனிச்சுக்குப் பயணமானார்!

இந்த விஷயம் பற்றி இந்திய ஒலிம்பிக் குழுவின் தலைவர் சிவந்தி ஆதித்தனிடம் கேட்டோம்.

"எவ்வளவு பேரை அனுப்புவது என்பதை நிர்ணயிப்பது அரசோ, இந்திய ஒலிம்பிக் குழுவோ அல்ல. அந்தந்த விளையாட்டின் சர்வதேசக் கூட்டமைப்புகள் நிர்ணயிக்கும் அடிப்படை விதிகளின்படிதான் விளையாட்டு வீரர்கள் தேர்வு செய்யப்படுகிறார்கள். சென்ற தேசிய விளையாட்டுப் போட்டிகளில் அவர்கள் காட்டிய திறமையும் கணக்கில் எடுத்துக் கொள்ளப்படுகிறது!" என்றார்.

இந்த முறை இந்தியாவிலிருந்து ஒலிம்பிக்ஸில் எவ்வளவு பேர் கலந்து கொள்ள இருக்கிறார்கள்? "ஹாக்கி குழு முடிவு செய்யப்பட்டு விட்டது. தடகளக் குழு இன்னும் சில நாட்களில் தேர்வு செய்யப்பட்டுவிடும். மொத்தம் 65 லிருந்து 70 விளையாட்டு வீரர்கள் இந்தியாவின் பிரதிநிதிகளாக ஒலிம்பிக்ஸில் இடம் பெறுவார்கள்."

இந்தியர்களுக்கு 'பதக்க' வாய்ப்பு உண்டா? "ஹாக்கியில் இருக்கிறது. பளு தூக்குதல் மற்றும் குத்துச் சண்டையில் எடை குறைவானவர்களுக்கான பிரிவிலும், துப்பாக்கி சுடுதலிலும் வாய்ப்பிருக்கிறது" என்றார் சிவந்தி ஆதித்தன் நம்பிக்கையுடன். பார்ப்போம்!

— ஜி.எஸ்.எஸ்.

'ஜெயலலிதாவின் வளர்ப்பு மகன் சுதாகரனின் மனைவி சத்தியலட்சுமி திண்டிவனம் அருகே திருவக்கரை கிராமத்திலுள்ள வக்ரகாளி அம்மன் கோவிலில் யாகம் நடத்தினார்!'

– சுதாகரனின் மனைவியுடன் சசிகலாவின் அக்கா உட்பட வேறு மூன்று பெண்களும் திருவக்கரை சென்று பதினெட்டு மணி நேர யாகம் நடத்தி, அந்தணர்களுக்கும் சுமங்கலிகளுக்கும் அந்தக்கால மகாராஜாக்கள் போல அள்ளி அள்ளி தானம் கொடுத்து ஓசைப் படாமல் திரும்பி இருப்பதாக நாளிதழ்ச் செய்தி சொன்னது.

எதற்காக இந்த யாகம்? அதுவும் அதிக பஸ் வசதி கூட இல்லாத, கண்காணாத மூலையில் உள்ள ஒரு குக்கிராமக் கோவிலில்? அப்படி என்ன அங்கே விசேஷம்?

தெரிந்து கொள்ளும் ஆவல் அதிகரிக்க, திருவக்கரைக் குக் கிளம்பினோம்.

• வக்கிரகாளி அம்மன் ஆலயம்

# அரசியல்வாதிகள் படையெடுக்கும் அதிசய ஆலயம்!

திண்டிவனத்திலிருந்து பாண்டிச்சேரி செல்கிற சாலையில் சரியாக இருபத்தைந்தா வது கிலோ மீட்டரில் இறங்கி, தெற்கு நோக்கி ஏழு கிலோ மீட்டரை சாலையே இல்லாத சாலையில் கடந்தால் திருவக்கரை வருகிறது. இப்படி ஓர் இடம் இருக்கிறதா என்றே தெரியாதபடிக்கு மிக உள்ளடங்கிய, மிக மிகச் சிற்றூர். இரண்டு மூன்று தெருக்கள் மட்டுமே. பத்து ஏக்கர் விஸ்தீரணமுள்ள கோவில்தான் பிரதானம்.

திருவக்கரை ஸ்ரீ சந்திரமௌளீஸ்வரர் ஆலயம் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட, ஆரம்ப கால சோழர்களால் கட்டப்பட்டதற்கான கல்வெட்டுச் சான்று இருக்கிறது. 'நடந்து போகும்' வராக நதியின் பின்னணியில் மா, தென்னை மரங்கள் கவிந்து குடைபிடிக்க, மிக ஆழ்ந்த நிசப்தத்துடன் இருக்கிறது கோவில்.

"ஆனால் நீங்கள் பவுர்ணமி, அமாவாசை தினங்களில் வந்து பார்க்க வேண்டும். நிற்க இடமில்லாமல் தவிக்கும்படி ஆகிவிடும். எங்கிருந்துதான் அத்தனை சனம் வருமோ? நெரிசலில் மூச்சு முட்டி விடும்!" என்றார் கோவிலின் குருக்கள், பரமேஸ்வரன்.

வக்ராசுரன் என்கிற அசுரனை மகாவிஷ்ணு கொன்ற க்ஷேத்திரம், அவன் தங்கை துன்முகி என்பவளை அம்பாள் சம்ஹரித்த பூமி என்றெல்லாம் அவர் சொன்ன

புராணக் கதைகளை விட, இக் கோவிலின் அமைப்பு, பழக்க வழக்கங்கள், நடைமுறைகள் தாம் மிக வித்தியாசப்பட்டு நம்மை வசீகரித்தன.

சிவன் (சந்திரமௌளீஸ்வரர்) விஷ்ணு (வரதராஜப் பெருமாள்) அம்பிகை (வக்ரகாளி அம்மன்) என மூன்று தெய்வங்கள் வீற்றிருக்கும் இக் கோவிலில் சிவனுக்கு (லிங்கத்துக்கு!) மூன்று முகங்கள். பெருமாளுக்கு, தாயார் சந்நிதி கிடையாது. உக்கிர முகத்துடனோ, சாந்த முகத்துடனோ அல்லாமல், உட்கார்ந்த நிலையில் தலைசாய்த்து, உறங்குகிற நிலையில் அம்மன்!

கோவிலை அப்பிரதட்சிணமாக வலம் வரும் வழக்கம், பிற கோவில்களில் இருப்பது போல நந்தி, கொடிக்கம்பம், லிங்கம் மூன்றும் நேர்க் கோட்டில் அமையாமை, கோவிலுக்குள்ளேயே ஒரு சமாதி (குண்டலினி மகரிஷியின் ஜீவசமாதி) எனப் பல



• பரமேஸ்வர குருக்கள்



• யாகசாலை : சசிகலாவின் அக்கா வந்தார்!

ஆச்சர்யங்கள், இங்கே.

சாதாரணமாக ஊர் எல்லையில் மட்டுமே அமையும் காளி கோவில் இங்கே நடு ஊரில் அமைந்திருப்பதும் ஆச்சர்யம். 'பலி' சமாசாரங்கள் ஏதும் கிடையாது என்பது கூடுதல் ஆச்சர்யம்.

தொண்டை நாட்டுத் திருத்தலங்கள் என சிறப்பித்துக் கூறப்படும் முப்பத்திரண்டு ஆலயங்களில் முப்பதாவது இது. திருஞானசம்பந்தர், நாவுக்கரசர் முதல் அருணகிரிநாதர் வரை பலர் இங்கே வந்து பாடி இருக்கிறார்கள்.

ஆனால் கோவிலின் பெருமை இதனாலெல்லாம் அல்ல, இப்போது. வக்ரகாளி அம்மனின் சக்தியை, ஊரில் யாரைக் கேட்டாலும் வாய் ஓயாமல் புகழ்கிறார்கள். ஜாதக தோஷம், திருமணத் தாமதம், ராகு-கேது தோஷம், எதிரி அச்சுறுத்தல், காரிய பலிதமின்மை என்று எந்த ஒரு குறைக்கும் இங்கே வந்து வேண்டிக் கொண்டால் - வக்கிரகாளி அம்மனை நான்கு முறை அப்பிரதட்சிணமாகச் சுற்றி வந்தால் போதும்; உடனே குறைகள் விலகி விடும் என்பது நம்பிக்கை.

குறிப்பாக, பவுர்ணமி - அமாவாசை தினங்களில் நள்ளிரவு பன்னிரெண்டு மணிக்கு நடைபெறும் பூஜையில் கலந்து கொண்டால் பிறகு எதற்கும் கவலைப்படுவதென்பதே அவசியமில்லை; அம்பாள் பார்த்துக் கொள்வாள் என்கிறார்கள்.

ஆயிரக்கணக்கில் மக்கள் கூடுவது ஆச்சர்யமில்லை. இந்தக் கோவிலுக்கு அரசியல்வாதிகளின் வருகை எப்போதிலிருந்து தொடங்கியது? என்று பரமேஸ்வர குருக்களிடம் கேட்டோம்.

"ஐந்து வருடங்கள் முன்பு முன்னாள் பிரதமர் சந்திரசேகர் வந்து போனார். அப்புறம் வி.பி. சிங். பிறகு, சென்னாரெட்டி. சென்னாரெட்டி அடிக்கடி வந்து போகத் தொடங்கியதும் வேறு பலரும் வரத் தொடங்கினார்கள்."

"யார், யார்?"

"தமிழக அமைச்சர்கள். குறிப்பாக எஸ்.டி.எஸ். பலமுறை வந்திருக்கிறார். பிறகு ஜெஜெ டீவி பாஸ்கரன். அவரது சகோதரர்கள் தினகரன், சுதாகரன்... இவர்களெல்லாம் அடிக்கடி வருவார்கள்."

"இந்தக் கோவில், அவர்களின் கவனத்தைக் கவர்ந்தது எப்படி?"

"பொதுவாகப் பலரும் நாடி ஜோதிடத்தில் நம்பிக்கை



• குண்டலினி மகரிஷியின் ஜீவசமாதி

கொண்டு, தங்களின் எதிர்காலம் அறிய, நாடி ஜோதிடர்களை அணுகுவார்கள். நாடியில் தோஷம் ஏதாவது இருந்தால் தெரிந்து விடும். காளிக்குப் பரிகாரம் செய்யச் சொல்வார்கள். இங்கே ஒரு காளிகோவில் இருப்பதையும் இதன் சக்தியையும் நாடி ஜோதிடர்களின் மூலம்தான் அரசியல் வி.ஐ.பிக்கள் அறிந்திருப்பார்கள். சென்னையில் வசிக்கும் ராஜேந்திர பிரசாத் என்கிற ஜோதிடர் மூலம்தான் தமிழக வி.ஐ.பிக்களுக்கு இந்தக் கோவில் அறிமுகமானது."

"இங்கே நேற்று சுதாகரனின் மனைவி, சசிகலாவின் அக்காள் மற்றும் சில பெண்கள் சேர்ந்து யாகமெல்லாம் செய்தார்களாமே?"

"சண்டி யாகம் நடந்தது என்பது வாஸ்தவம்தான். தேவிமகாத்மிய பாராயணம் செய்தார்கள்."

"அரசியல் வி.ஐ.பிக்கள் இப்படி தனிப்பட்ட முறையில் ஆலயத்தில் யாகமெல்லாம் நடத்தலாமா? சாஸ்திரப்படி அதெல்லாம் சரியா?"

"யார் வேண்டுமானாலும் செய்யலாம். ஏதாவது தோஷம் இருக்குமானால் அதற்கான பரிகாரமாக இப்படி யாகம் செய்வார்கள்."

"அவர்கள் என்ன காரணம் கருதி யாகம் செய்தார்கள்?"

"அது எனக்குத் தெரியாது. அறநிலையத் துறை அலுவலகத்தில் (சென்னையில்) பணம் கட்டி, ரசீது வாங்கி வந்தால் இங்கே நாங்கள் நடத்தித் தருவோம். சண்டிஹோமம் செய்ய வேண்டும் என்றார்கள். நடத்தித் தந்தோம். அவ்வளவுதான்."

"பொதுவாக சண்டிஹோமம் எதற்குச் செய்வார்கள்?"

"தடைபட்ட திருமணம் நடக்க, குடும்ப அமைதிக்கு, ஏதாவது கிரகங்கள் வக்கிர நிலையில் இருந்தால் வக்கிர நிவர்த்தி அடைய- இப்படிப் பல காரணங்கள்."

அரசியல் வி.ஐ.பிக்கள் பலர் அடிக்கடி வருவதால் கிராமத்தின் இயல்பான அமைதி குறைகிறதா என்று ஊரில் சிலரிடம் கேட்டோம்.

சுற்றுவட்டார மலைகளிலிருந்து கருங்கற்கள் கொண்டு வந்து, அம்மி பொளிவதையே பிரதானத் தொழிலாகக் கொண்டிருக்கும் இக்கிராமத்து மக்கள், "அப்படியெல்லாம் ஒன்றுமில்லை" என்கிறார்கள்.

செக்யூரிட்டி ஆட்கள், முன்பின் பாராவாகப் பல கார்கள், துப்பாக்கி தாங்கிய போலீஸார் எதுவும் கிடையாதாம்.

"கவர்னர் சென்னாரெட்டி வந்தால் கூடத் தனியாகத்தான் வருவார். பாதுகாப்புக்கு ஒரே ஒரு நபர் மட்டும் உடன் வருவார்" என்றார் பரமேஸ்வர குருக்கள்.

அ.தி.மு.க.வின் முன்னாள் அமைச்சர்கள் யாரும் (அவர்கள் ஆட்சிக் காலத்தில்) வந்தால் ரெவின்யூ அதிகாரிகள், கலெக்டருக்குக் கூட அவர்கள் வந்து போவது தெரியாதாம்!

நாமெல்லாம் டீவியிலும் புகைப்படங்களிலும் மட்டுமே பார்க்க முடிகிற 'அமலாக்கப் புகழ்' சகோதரர்கள் மூவரையும் திருவக்கரை கிராமத்தினர், ஒவ்வொருவரும் தமக்கு மிக நெருக்கமாகத் தெரிந்தவர்கள் போலச் சொன்னது வியப்பாக இருந்தது!

ஆறு வருடங்கள் முன்பு கடைசியாகக் கும்பாபிஷேகம் நடந்திருக்கும் இக் கோவிலுக்கு பக்தர்களின் காணிக்கையாக வரும் பொருட்கள் மிக அதிகம் என்று தெரிகிறது. 'வெள்ளி, பொன் நகைக் காணிக்கைகளை அலுவலகத்திலேயே கொடுத்து ரசீது பெற்றுக் கொள்ளவும்' என்று போர்டே எழுதி வைத்திருக்கிறார்கள்!

பி.கு : நாம் திருவக்கரை செல்லத் தூண்டுதலாக இருந்த நாளிதழ் செய்தியில் ஒரே ஒரு தவறு. 'சிவாஜியின் பேத்தியும் சுதாகரனின் மனைவியுமான சத்தியலட்சுமியும் சசிகலாவின் அக்கா மற்றும் சில பெண்களும் யாகம் நடத்தினர்' என்ற செய்தியின் முதல் பகுதி தவறு. சத்தியலட்சுமி வரவே இல்லையாம். "அவர் நிறைமாத கர்ப்பிணியாக இருக்கிறார். எப்படி வருவார்?" என்று கேட்டார் பரமேஸ்வர குருக்கள்.

**- ஔரங்கசீப்**

படங்கள் : **யோகா**



# கணக்கோ கணக்கு!

குறிப்பிட்ட எண்ணிக்கை யூதர்களை, குறிப்பிட்ட கனபரிமாணமுள்ள அறையில் அடைத்து, விஷ வாயு செலுத்திக் கொல்வதற்கு ஹிட்லர் எவ்வளவு விஷ வாயு பயன்படுத்தியிருப்பார் என்ற தோரணையில் மாணவர்களுக்குப் பரீட்சையில் கேள்வி அமைத்திருந்தார் பிரான்ஸ் தேசத்தில் ஓர் ஆசிரியை. இதற்காக ஃபிரெஞ்சு அரசாங்கம் அவர் மீது ஒழுங்கு நடவடிக்கை எடுத்தது. பாரீஸ் டீச்சரம்மாவை முன்னோடியாக வைத்துக் கொண்டு நம்ம ஊர் கணக்கு வாத்தியார் யாராகிலும் கேள்வி கேட்டால் எப்படி அமையும்?

1) 10.5 கிலோ தங்க நகையை உடம்பில் அணிந்து கொண்டு 8.3 கிலோ மீட்டர் நடக்க ஒரு சகோதரிக்கு இரண்டு மணி மூன்று நிமிடம் பத்து வினாடிகள் தேவைப்படுகிறதென்றால், அதே எடையுள்ள இமிடேஷன் நகைகளை அணிந்து கொண்டு, முன்னவர் நடந்த தூரத்தில் 2/3 பாகம் நடக்க இன்னொரு சகோதரிக்கு எத்தனை நேரம் தேவைப்படும்? இருவருடைய நடக்கும் வேகமும் ஒன்றேதான் என்ற அடிப்படையில் கணக்குப் போடவும். தங்கத்தின் எடை : இமிடேஷன் உலோகத்தின் எடை :: 10.5 : 2.1. சகோதரிகளின் எடையைக் கண்டு பிடித்து பவுண்டில் தரவும்.

2) 30 கிலோ கிராம் எடையுள்ள அமைச்சர் 45 டிகிரி குனிந்து தன் தலைவியை வணங்குகையில், கால் தவறிக் கீழே விழுந்து விடுகிறார். அவர் நின்று கொண்டிருந்த இடத்திலிருந்து, தரையைத் தலை முத்தமிட்ட இடம் 4.5 அடி தூரத்திலிருக்கிறது. பிதாகரஸ் சித்தாந்தத்தைப் பயன்படுத்தி, அமைச்சரின் உயரத்தை இஞ்சில் தரவும்.

3) இருநூறு பவுண்டு எடையுடைய மத்திய அமைச்சரை எடைக்கு எடை கல்யாண பூசனியில் (பறங்கிக்காயில்) துலாபாரம் தூக்க 5000.3 பூசனிக்காய்கள் தேவப்படுகின்றன. அதே அமைச்சரை மைசூர் போண்டாவில் துலாபாரம் தூக்க எத்தனை போண்டாக்கள் தேவை? போண்டாவின் எடையை எக்ஸ் என்று கொள்ளவும்.

4) 40 அடி உயரமுடைய கட் அவுட் கீழே குடைசாய்ந்து, மணிக்கு முப்பது மைல் வேகத்தில் போய்க் கொண்டிருந்த காரின் கூரையை நொறுக்க ஐந்து வினாடிகள் தேவைப்படுகிறதென்றால், அறுபது மைல் வேகத்தில் ஓடும் ஆறு கார்களை ஒரே சமயத்தில் நொறுக்க எத்தனை கட் அவுட்கள் தேவைப்படும்? (விடையை இரண்டு தசாம்ச சுத்தத்திற்குத் தரவும்.)

5) முக்கியமான புள்ளி ஒருவர் வருகையில், 60 அடி அகலமான பாதையில் போக்குவரத்துக்கு 30.58 நிமிடங்கள் இடைஞ்சல் ஏற்படுகிறதென்றால், 100 அடி அகலமான பாதையில் எத்தனை நிமிடம் தாமதம் ஏற்படும்? (சாலையில் ஸ்தம்பித்து நிற்கும் வாகனங்களின் எண்ணிக்க 120 எனக் கொள்ளவும்.)

இதற்கு மேலும் எழுதி பள்ளி ஆசிரியர்களுக்கு வழிகாட்டினால் பிரெஞ்சு அரசாங்கம் அந்த ஆசிரியை மீது நடவடிக்கை எடுத்தது போல நம் மீது தமிழக அரசு நடவடிக்கை எடுக்கலாம் என்று பராபரியாக செய்தி கேள்விப் பட்டதால் இத்துடன் நிறுத்திக் கொள்கிறோம்!

- ஜி.எஸ். பாலகிருஷ்ணன்

**ப**டுதோல்விக்கான காரணங்களைத் தெரிந்து கொள்வதற்காக, ஒவ்வொரு மாவட்டத்தைச் சேர்ந்த தொண்டர்களையும் தலைமை நிலையத்தில் ஜெயலலிதா சந்தித்து வந்தார் அல்லவா. இந்தச் சந்திப்புகள் காலை பதினொரு மணிக்குத் துவங்கி, பெரும்பாலும் மதியம் ஒன்றரை மணிக்கு முடிந்து விடும். அலுவலக வளாகத்தில் துவக்கத்திலிருந்தே காத்துக் கொண்டிருக்கும் நிருபர்களிடம் பேசுவதைப் பல சமயங்களில்




தவிர்த்து விடுவார் ஜெ. ஆனால் கடந்த ஏழாம் தேதி, வழக்கத்துக்கு மாறாக பத்திரிகையாளர்களைச் சந்தித்தார். 'மேடம் கூப்பிட்டாங்களா...?' என்று கண்களை அகல விரித்தபடியே ஜெவைச் சந்திக்க ஓடியது நிருபர்கள் கூட்டம்.

எல்லோரும் போய்ச் சேருவதற்கு முன்னரே சந்தனக் கடத்தல் வீரப்பன் விவகாரத்தைப் பற்றி மனப்பாடம் செய்தது போல் ஒப்பித்தார் ஜெ. பின்னர் அயல் நாட்டு மது மீதான வரி விதிப்பு பற்றி கொஞ்சம். அப்புறம் கேள்விகள் கேட்க அனுமதிக்கப்படும் என்ற ரீதியில் கொஞ்சம் இடைவெளி. சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்ட ஓர் ஆங்கில தினசரியின் நிருபர், 'வீரப்பனை ஒரு பத்திரிகையாளர் சந்தித்ததை இவ்வளவு விவகாரமாக்கும் நீங்கள், உங்கள் வளர்ப்பு மகன் திருமணத்தில் அமுலாக்கப் பிரிவினரால் தேடப்பட்டு வந்த தினகரன் கலந்து கொண்ட போது, அவரை ஏன் பிடித்துக் கொடுக்கவில்லை?" என்று கேட்டதும் ஜெ.வின் முகம் சிவந்தது.

"என்ன சொல்றீங்க நீங்க... அவர் ஒன்றும் அறிவிக்கப்பட்ட குற்றவாளி அல்லவே! அவர் திருமணத்தில் கலந்து கொண்டது சட்ட விரோதம் அல்ல!" என்று தடுமாற்றத்துடன் சொல்லி முடித்தார். தொடர்ந்து 'மணி'யான நிருபர் ஒருவர், "பல சம்மன்கள் அனுப்பியும் சசிகலா அமுலாக்கப் பிரிவில் ஆஜராகவில்லையே ஏன்?" என்று கேட்க, மூட் அவுட் ஆகிவிட்டார் ஜெ.

"நான், இதுக்குத்தான் உங்களைச் சந்திப்பதில்லை. வீரப்பன் விவகாரத்தைச் சொல்வதற்குத்தான் இன்று உங்களைச் சந்தித்தேன். திசை திருப்பி விட்டீர்கள். இனி 'சசிகலா-ஜெயலலிதா' என்று தலைப்புப் போட்டு செய்தி வெளியிடுவீர்கள். வீரப்பன் விவகாரம் பின்னால் போய் விடும்!" என்று கடுகடுத்தார் ஜெ.

அம்மா மூட் அவுட் ஆனதால் பாதிக்கப்பட்ட சில குறிப்பிட்ட நிருபர்கள் "மேடம்.. மேடம்" என்று கொஞ்சம் ஸாஃப்ட் ஆன கேள்விகளுக்கு மாறினார்கள்.

அது மாத்திரமல்லாமல்... மற்ற நிருபர்களால் சங்கடமான கேள்விகள் கேட்கப்படும்போதெல்லாம் ஜெ. பதில் சொல்வதற்கு முன் குறுக்கே புகுந்து, 'அம்மா'வைக் காப்பாற்றுவதற்காகத் திசை திருப்பும் கேள்விகளையும் கேட்க ஆரம்பித்தார்கள்!

நிருபர் கூட்டம் முடிந்தவுடன், "மேடம், நீங்கள் அடிக்கடி எங்களைச் சந்திக்கணும்; ஒரு மணிக்குள்ள சந்திச்சீங்கன்னா, மாலைப் பத்திரிகைகளுக்கும் வசதியாக இருக்கும்!" என்றெல்லாம் கோரிக்கை வைத்தார்கள், குறிப்பிட்ட சில நிருபர்கள்.

"பிரஸ் மீட் என்று வந்தால் கேட்கிற கேள்விகளுக்குப் பதில் சொல்லித்தான் ஆகணும். இதை மட்டும்தான் சொல்வேன் என்றால் எப்படி?" என்று முணுமுணுத்துக் கொண்டே போனார்கள் நியாயமான கேள்விகளைக் கேட்ட நிருபர்கள்.

அரசாங்க அதிகாரிகள், போலீஸ் மத்தியில்தான் 'அம்மா' விசுவாசம் ஒட்டிக் கொண்டிருக்கிறது என்பதில்லை; மூத்த பத்திரிகைகளின் நிருபர்கள் உள்பட சில நிருபர்களும் அம்மாவின் விசுவாசிகளாகத்தான் இன்னமும் இருக்கிறார்கள்!

- கௌசி

## RAMACHANDRA SAREES

**Quality & Quality**

தரம் தரம் தரம்தவிர வேறில்லை!
உயர்ரக Madurai Sungudi
புடவைகள் வழங்குபவர்கள்

ராமசந்திரா சாரீஸ்

**RAMACHANDRA SAREES**



(மதுரை சுங்குடி புடவைகளின் உலகம்)

H.O. 37-B, Arya Gowder Road,
Postal Colony Bus Stop 3rd Street,
West Mambalam, Madras - 33.
Ph : 4896532

**Other Attractions :**
BENGAL, COIMBATORE KORA, DEVENDRA & VENKATAKIRI.

வழங்குபவர்கள் : Ramachandra Sarees 20 B. Old Kuyavar palayam road, Madurai - 625 009.

---

## மீராவின் வைப்பு நிதித் திட்டம்

இன்றே ரூ. 1000 Deposit செய்து அதற்கு நிகராக எங்கள் show room-லிருந்து சூரத் சாரிகள், பெங்கால் காட்டன்; காஞ்சிபுரம் பட்டு, மைசூர் சில்க், கோரா காட்டன், சுங்குடி சேலைகள் மற்றும் சுடிதார் பிளவுஸ் ஆகிய அனைத்தையும் விற்பனைக்கு எடுத்துச் செல்லலாம். மேலும் நீங்கள் Deposit செய்த தொகையை 46 மாதங்களில் இரண்டு மடங்காக பெறலாம். அதுவரை எங்களிடமிருந்து புடைவைகளை விற்பனைக்கு எடுத்துச் செல்லலாம். மேலும் விவரங்களுக்கு,

## மீரா டெக்ஸ்டைல்ஸ்

*26/1, மோதிலால் தெரு, தி.நகர்,
சென்னை - 600 017.
போன் : 4342696*

**Authorised Dealers :**
**WIMCO FABRICS - SURAT**

---

FOR THE LOVERS OF SUNGUDI SAREES

A FINEST SUNGUDI SAREE OFFERED TO OUR CUSTOMERS PAY A VISIT AND SEE THE COOL AND COMFORT OF

## SAKUNTHALA SAREES

ALSO AVAILABLE

- RANI SAREES
- BENGAL COTTON SAREES
- BENGAL PRINTED PURE SILKS
- BATIK COTTON SAREES
- CHUDDIDAR MATERIALS (FINE & COLOURFUL BATIK DESIGNS)

## MADURAI TEXTILES

2, SIVAPRAKASAM ROAD,
PONDY BAZAAR, MADRAS -
600 017

---

## RAMACHANDRA SAREES

**Quality & Quality**

தரம் தரம் தரம்தவிர வேறில்லை!
உயர்ரக Madurai Sungudi
புடவைகள் வழங்குபவர்கள்

ராமசந்திரா சாரீஸ்

**RAMACHANDRA SAREES**



(மதுரை சுங்குடி புடவைகளின் உலகம்)

B.O.No. 2 R.K.Mutt Road, Picnic plaza
(Basement Shop) Luz Corner,
Mylapore, Madras - 4

**Other Attractions :**
BENGAL, COIMBATORE KORA, DEVENDRA & VENKATAKIRI.

வழங்குபவர்கள் : Ramachandra Sarees 20 B. Old Kuyavar palayam road, Madurai - 625 009.

# குறையொன்றுமில்லை



விஷ்ணு சஹஸ்ரநாமத்தின் ஒவ்வொரு நாமத்துலயும் நால் வேத மந்திரங்களும் அடங்கியிருக்கு. அதனாலே அதைப் பாராயணம் பண்ணினால் வேத பாராயணம் பண்ணின பலன் என்று சொன்னேன். அதிலும் ராம நாமத்துக்குத் தனியொரு சக்தி.

ராம நாமத்துக்கு எப்படி அதன் சக்தி வருகிறது? காயத்ரி மந்திரத்தின் பொருளை ராமாவதாரத்தின் போது பகவான் நடித்துக் காட்டியதாலே!

அதனால்தான் வால்மீகி, ராமாயணத்தில் ஆயிரம் சுலோகத்துக்கு ஒரு தடவை காயத்ரியின் ஒரு அக்ஷரத்தை வைத்தார். மொத்தம் 24,000 சுலோகம். ராமாயணத்தைப் பாராயணம் பண்ணினா காயத்ரியைப் பாராயணம் பண்ணின பலன் கிடைக்கும்.

காயத்ரி மந்திரம் எல்லா மந்திரங்களுக்கும் தாய்.

ஒருமுறை தேவாசுர யுத்தம் நடந்து கொண்டிருந்த போது, தேவர்களுக்கே நித்திய ஜெயம் உண்டாகிக் கொண்டிருந்தது. முப்பத்து மூன்றாவது நாள் அந்த தேவதைகள் படுதோல்வி அடைந்தார்கள். 'இன்றைக்கு நாம் ஏன் தோற்றோம்?' என்று ஆராய்ச்சி பண்ணினார்கள். 'காயத்ரியை ஜபிக்காமல் சென்றதால்...' என்று பதில் கிடைத்தது. ஜயம் வந்தபோது மந்திரத்தை மறந்ததால் தோல்வியுண்டாயிற்று!

மனுஷ சுபாவமே அதுதான். சரீரத்தைக் கொடுத்த பகவானை மறந்து, உடம்பு தளர்ந்து போகிறபோது மட்டுமே அவனை நினைக்கிறோம்.

அதனால்தான் குந்தி ஒரு வித்தியாசமான வரத்தைக் கண்ணனிடம் கேட்டாள். வாழ்க்கையிலே விபத்துக்களை உண்டு பண்ணச் சொல்லி வரம் கேட்டாள். 'ஏன் இப்படிக் கேட்கிறாய்?' என்றான் பரமாத்மா... 'அப்போது தானே உன் நினைவு சதா மனத்திலே இருக்கும்...' என்றாளாம் குந்தி!

அதைப் போல தோல்வி வந்தபோதுதான் 'காயத்ரியை மறந்தோம்' என்று உணர்ந்தார்கள் தேவர்கள். கடைசியில் அவள் இருந்த இடத்தைத் தேடி அலைந்து போய்க் கண்டுபிடித்து ஸ்தோத்திரம் பண்ணினார்கள்.

ஸ்தோத்திரம் பண்ணப்பட்டவுடன் காயத்ரி தேவர்களின் பக்கம் திரும்பினாளாம். ஸ்தோத்திரத்தின் மகிமையைப் பாருங்கள்! விஷ்ணு சஹஸ்ரநாமம் கூட, 'ஸ்தோத்தரிக்கத் தகுந்தவன் பரமாத்மா; ஸ்தோத்திரப் ப்ரியன் அவன்...' என்கிறது!

# முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார் 6



அப்படியிருக்கிறது ஒரு பெருமையா என்று கேட்டால், அப்படியிருப்பதும் அவன் கருணை தான் என்று சொல்லணும். நமது ஸ்தோத்திரம் அவன் பிரபாவத்தை முழுதும் சொல்ல முடியுமா? ஏதோ கொஞ்சம் சொல்லலாம். அவனிடம் இருப்பதையும் இல்லாததையும் நம்மாலே முழுதும் சொல்லி ஸ்தோத்திரம் பண்ண முடியாது. நாம் ஸ்தோத்திரம் பண்ணும் போது பகவான் முகத்தைத் திருப்பிக் கொண்டு விட்டால் என்ன செய்ய முடியும்! அப்படிச் செய்யாமல் ஸ்தோத்திரப் பிரியனாக இருந்து நமக்கு அருள் செய்வதே அவன் கருணை.

பகவான் ஸ்தோத்திரப் ப்ரியனாக இருப்பதாலேதான் அவனிடமிருந்து தோன்றிய நாமும் ஸ்தோத்திரப் ப்ரியர்களாக இருக்கிறோம். மண்ணின் குணம் அதைக் கொண்டு செய்யப்படும் பானைக்கு வருகிற மாதிரி - காரணத்தின் குணம், அதன் பயனான காரியத்துக்கும் வரும்!

ஆக, வேத மந்திரங்கள் எல்லாமே ஸ்தோத்திரம், துதிபாடுதல்தான். ஸ்தோத்திரம் செய்த தேவர்களின் பக்கம் காயத்ரி வந்தாள். அவர்களுக்கு வெற்றி உண்டாயிற்று. அப்படிப்பட்ட காயத்ரி - தேவர்களுக்கே அனுக்கிரஹம் செய்தாள் என்றால் அந்த அருள் மேலும் தேவையான நமக்கு எத்தனை செய்வாள்!

அந்த காயத்ரியை தேவர்கள் எப்படித் துதித்தார்கள் என்றால், 'விச்வமஸி, விச்வாயு: என்று ஆரம்பித்துத் துதித்தார்கள்! அதுவே விஷ்ணு சஹஸ்ரநாமத்தின் முதல் நாமமாக இருக்கிறது!

விச்வம் என்பதன் விரிவான பொருள் என்ன?

ஸ்ரீபதியான பகவானுடைய மூச்சுக்காற்றாக விளங்கக் கூடியது வேதம். அதன் மந்த்ரார்த்தத்தைக் கேட்டோமானால் விசேஷமான பலன் கிடைக்கும்.

திருவேங்கட மலையைப் பற்றி சுவாமி தேசிகன் சொல்கிறார்:

வேங்கட வெற்பென விளங்கும் வேத வெற்பே. வேதமே பர்வத (மலை) ரூபத்திலே அமைந்திருக்கிறது.

'வேம்' என்றால் 'மகா பாவம்' என்று பொருள். 'கடயதி' - என்றால் 'பொசுக்குதல்' - நமது மகா பாவங்களை நெருப்பிலே பொசுக்கி விடக்கூடிய ஆற்றல் திருவேங்கட மலைக்கு இருக்கிறது. வேதங்களிலே ஏழு காண்டம் உண்டு; திருவேங்கடத்தில் ஏழு மலை! அந்த வேதங்களால் தாங்கப்பட்டு நிற்கிறான் திருவேங்கடமுடையான்.

'மலை வடிவிலே வேதம் இருக்கு....' என்று சொன்னால் புரியவில்லையே என்று கேட்கலாம்.

வேதத்தைப் பாராயணம் பண்ணினால் முழுமையாகப் புரிகிறதா? புரியாவிட்டாலும் உயர்த்தியான பாவம் ஏற்படுகிறதோயில்லையோ. நம்முடைய அந்த பாவத்தை உணர்ந்து பரமாத்மா, மேலும் மேலும் புரியும்படியாகப் பண்ணுகிறான்.

வேத வடிவிலே மலை இருக்கிற மாதிரி, சப்த வடிவிலே பரமாத்மா இருக்கிறான். அதனால்தான் வேதாந்த விசாரத்திலே கருத்து வேறுபாடு கொண்ட த்ரிபதாசார்யர்கள் கூட (சங்கரர், ராமானுஜர், மாத்வாச்சார்யர்) 'வேதம் நித்யமாய் இருக்கக்கூடியது' என்று ஒப்புக் கொண்டார்கள்.

பிரளய காலத்தில் கூட வேதம் அழிவதில்லை. அதைத் தாங்கிக் கொண்டு வெளியே விடுகிறான் பரமாத்மா.

வேத கோஷத்தின் உயர்ந்த சப்தத்துக்கு பிரும்ம கோஷம் என்று பெயர். 'சமே' 'சமே' என்ற ஒலி மீண்டும் மீண்டும் ஒலிக்கக் கேட்கலாம். 'சமே' என்றால், 'அது எனக்கு உண்டாகட்டும்' என்று அர்த்தம்.

பகவானிடத்திலே என்ன கேட்க வேண்டும் என்பதைக் கூட வேதம் நமக்குச் சொல்லித் தருகிறது. நாமாகக் கேட்டால் அல்பமான விஷயத்தைத்தான் கேட்போம்.

இந்திரனுடைய தாயாரான அதிதி சொல்கிறாள் : 'கற்பக விருக்ஷத்திடம் போய் கௌபீனம் கேட்டாற் போலே...' என்று!

அப்படியல்லாமல், மங்களம், கீர்த்தி, க்ஷேமம், எல்லாம் உண்டாகட்டும் என்று வேதம் கேட்கிறது. 'விச்வம் சமே' என்பதும் கோரிக்கைகளும் ஒன்று.

'விச்வத்தை எனக்குக் கொடு' என்று கேட்டால், உலகம் மொத்தமும் கிடைக்குமா? அது பெருங்கோரிக்கை இல்லையா....?

இந்த கோரிக்கைக்கு என்ன வியாக்யானம் பண்ணுகிறார்கள் என்றால், விச்வ சப்தத்துக்கு 'பகவான்' என்று அர்த்தம். 'விச்வம்' என்றால் பகவான். சஹஸ்ரநாமத்திலே முதல் சப்தம் விச்வம். அந்த சப்தத்தினாலே பரமாத்மாவே சொல்லப்படுகிறான். அவனையே நாம் அடைய வேண்டும் என்பது கோரிக்கை. அந்த பரப்ரும்மத்தையே நாம் அடைய வேண்டும்!

அந்த பரமாத்மாவை, 'வா வா! வந்து என்னை ரக்ஷி' என்று பிரார்த்திப்பதுதான் 'விச்வம் சமே'.

'சுவாமி! நீ வரமாட்டாயா? சீக்கிரமாக வர மாட்டாயா? காலம் குறுகாதா?' என்று நெக்குருகி ஒருவர் உபந்யாசம் பண்ணுகிறார்.

பகவான் கருடாருடராய் வந்து 'இப்பவே வா, கருடனில் ஏறிக்கொண்டு போகலாம்...' என்று அழைத்தால், போக முடியுமா? அவனே வந்து கூப்பிட்டாலும், போவதற்கு எத்தனை பேர் சித்தம்?

ஆசையினாலே பிரபுவினிடத்திலே என்ன சொல்ல வேண்டும்..?

'நான் கூப்பிட்டால் நீ வந்துவிடுவாய்; ஆனால் நீ கூப்பிட்டால் நான் வருவேனா? ஒன்று செய்; இந்த சரீரம் கீழே விழுகிற வரையிலே அதிலே இருந்து கொள்கிறேன். அதற்குப் பிறகு இன்னொரு சரீரத்தைக் கொடுத்து விடாதே....' என்று பிரார்த்திக்கணும்.

அதற்கும் அவன் சித்தமாயிருக்கிறான் என்னும் போது, அவன் தயையை என்ன வென்று சொல்வது!

**ப**கவானின் தயையைக் குறித்து தயா சதகம் என்றே பாடியிருக்கிறார் சுவாமி தேசிகன். எத்தனையோ குணமிருந்தாலும் தயா குணம் இல்லாமல் பிரகாசிக்காது.

'அம்மா, தயே! நீ பகவானிடத்திலே இல்லையென்றால் மற்றைய குணங்களெல்லாம் அவனுக்கு தோஷமாகுமேயொழிய குணங்களாகா!' என்கிறார்.

நாம் அழைத்ததும் தயையினால் ஓடி வருகிறவனைப் பார்த்து, 'இப்போது நான் சித்தமாக இல்லை; அப்புறம் என்னை அழைத்துப் போ' என்று சொன்னால் அதற்கும் அவன் தயார்!

இப்படிப்பட்ட தயாளனான பரமாத்மா நமக்குக் கிடைப்பது விச்வ சப்தத்தினாலே... விச்வ சப்தத்தை தியானம் பண்ணினால், ஓம் விச்வஸ்யை நம: ஓம் விச்வராய நம: என்று அதைச் சொல்லி அர்ச்சனை பண்ணினால், அவன் தயை இல்லாமல் போகுமா, கிருபை கிடைக்காமல் போகுமா...?

விச்வம் என்கிற சப்தத்துக்குப் பூரணத்துவம் என்றும் ஒரு பொருள் உண்டு. பகவான் எதிலும் குறைவில்லாதவன் என்று அர்த்தம். அதனால்தான் பூர்ணன், கொள்ளக் குறைவிலன் என்றெல்லாம் அவனைப் பாடியிருக்கிறார்கள்.

சுவாமி தேசிகன் சொல்கிறார்:

*தமதனைத்தும் அவர்தமக்கு வழங்கி*

தான் மிக விளங்கக் கூடியவன் பரமாத்மா.

கொடுத்ததினாலே அவனிடத்திலே குறை வில்லை. பகவான் கொள்ளக் கொள்ளக் குறைவிலான்! 'கொள்ள மாளா இன்ப வெள்ளம் அவன்' என்கிறார் ஆழ்வார். கொடுக்கக் கொடுக்க அவனிடத்திலே விருத்தியாகிக் கொண்டேயிருக்கிறது. அதனால் அவன் பூரணன் ஆகிறான்.

எல்லாம் அவனிடத்திலே இருக்கிறது என்றால், அவனுக்கு நாம் என்ன கொடுக்க முடியும்? தேங்காயை அவனிடத்தில் சமர்ப்பிக்கிறோம்; அவனிடத்திலே தேங்காய் இல்லையா? புஷ்பத்தை சமர்ப்பிக்கிறோம். அவனிடத்திலே புஷ்பம் இல்லையா....?

இந்தக் கேள்விகளுக்கான பதில் ஒரு அழகான கதையிலே அடங்கியிருக்கிறது. அதை அடுத்த வாரம் பார்ப்போம்.

(தொடரும்)

உங்கள்
இல்லத்திற்கு அதிர்ஷ்ட
தேவதையை அழைத்து வருகிறாள்
"பாரதி"

**பாரதியின் போட்டிக்கான
பரிசு வழங்கும் விழா
மற்றும் தி. நகர் ஷோரூம்
திறப்பு விழா
26-06-1996**

# பாரதியின் மிகப்பெரிய
# புதிய நகை மாளிகை

"கென்ஸஸ் டவர்"
வடக்கு உஸ்மான் ரோடு, (பாரதி நகர்),
தி. நகர், சென்னை – 600 017.
போன் : 8252762

## திறப்பு விழா
## டெபாசிட் சேகரிப்பு திருவிழா

ஒவ்வொரு ரூ. 10000/-
வைப்புத்தொகை
செலுத்துபவர்களுக்கும்,
ரூ 10000/- மதிப்புள்ள
தங்க நகைகள்
வாங்குபவர்களுக்கும்
போட்டிக்கான படிவம்
வழங்கப்படும். உங்களது
திறமைக்கு நிச்சயம்
பரிசு உண்டு

முதல் பரிசு



மாருதி எஸ்டீம் கார்
மற்றும் ஏராளமான
கண்கவர் பரிசுகள்

உங்களின் டெபாசிட்டுகளுக்கு
ஓர் ஆண்டுக்கு

**30%**
வட்டி
**+7%**
ஊக்கத்தொகை
**+2** கிராம்
தங்க நாணயம்

மற்றும் 501 பரிசுகள்

★ வட்டித் தொகையை பின்
தேதியிட்ட காசோலைகளாக
முன்னதாகவே வழங்கப்படும்

கைதேர்ந்த வல்லுநர்களால் வடிவமைக்கப்பட்டு புத்தம் புதிய டிசைன்களில்
நகைகளை வழங்குகிறோம். இன்றே விஜயம் செய்யுங்கள் ! . . . .



# பாரதி ஜெம்ஸ் & ஜுவல்ஸ்

F-7, F8, ஸ்பென்சர் பிளாசா, முதல் மாடி, 769, மவுண்ட் ரோடு, சென்னை – 600 002.
போன் : 8524280, 8555394, 8555395 பேக்ஸ் : 091 – 44 – 8521782

கிளைகள் : 101, ஆற்காடு ரோடு, வளசரவாக்கம், சென்னை – 600 087. போன் : 4827250
74, பிருந்தாவனம் தெரு, மேற்கு மாம்பலம், சென்னை – 600 033. போன் : 429180
109, நேதாஜி ரோடு, மதுரை – 625001. போன் : 34035.

எல்லா ஞாயிறு அன்றும் ஷோரூம் திறந்திருக்கும்

★ பாரதி 'சுபயோகம்' சேமிப்பு திட்டம்
★ பாரதி கோல்டு டெபாசிட் திட்டம்
★ பாரதி PAY-BACK (திருப்பி தருதல்) திட்டம்
★ பாரதி தவணைமுறைத் திட்டம்

CHAARMINE

இன்றே முந்துங்கள்! போட்டியில் கலந்து கொண்டு பரிசுகளை வெல்லுங்கள்

● ஏ. செந்தில், போத்தனூர்.

? *தோல்வியில் துவளாமல் எஸ்.டி.எஸ். மட்டும் அடிக்கடி அறிக்கை விட்டுக் கொண்டிருக்கிறாரே...?*

! இப்போதுதான் அறிக்கைகளுக்குக் கட்டாய ஓய்வு கொடுக்க வேண்டிய நிலையிலிருக்கிறாரே...! சி.பி.ஐ. விசாரிப்பில் துவண்டு, விஜயன் வழக்கில் தண்டனை பெறுவாரா? அல்லது துவளாமல் அப்ரூவ ராக மாறி வெளி வரப் போகிறாரா...? பார்க்க வேண்டும்!



• இப்போது மெரினாவில்...?

**இன்று உண்ணாவிரதம் இருப்பாரா?**

● என். ஆர். ரவி, திருவெண்காடு.

? *'ஜெ' தண்டிக்கப்பட வேண்டுமா? மன்னிக்கப்பட வேண்டுமா...?*

! தேர்தலில் தோற்றுப் போவது மட்டுமே தண்டனை என்கிற நிலை மாற வேண்டும். செய்த குற்றங்களுக்குச் சட்டப்படி தண்டனையும் வேண்டும்.



• அருமை தெரியாமல்...

● எம். அசோக்ராஜா, அரவக்குறிச்சிப்பட்டி.

? *தேவேகௌடா, காவிரி நீர் விஷயத்தில் எப்படிச் செயல்படுவார்...?*

! பருவமழை பலமாகப் பெய்து, கிருஷ்ணராஜ சாகர் திறந்து விடப்பட, மேட்டூர் அணை நிரம்பி விட வேண்டும் என்று பிரார்த்தனை செய்து கொண்டிருப்பார்! அப்படி நடந்துவிட்டால்... அப்பாடா! ஒரு வருஷத்துக்குக் கவலையில்லை பாருங்கள்!



• ...கிண்டல் அடிக்கலாமா...?

● எஸ். ஸ்ரீதர், நெய்தவாசல்.

? *'எங்கள் எம்.எல்.ஏ. தவறு செய்தால் அவர் தலை வெட்டி, காணிக்கையாக்கப் படும்!' என்று டாக்டர் ராமதாஸ் கூறியுள்ளாரே...?*

! மரம் வெட்டினால் மறுபடி நட்டு நல்ல பெயர் வாங்கிக்கலாம்... தலை வெட்டினால்...?!

● ஜே. கண்ணன், சென்னை - 101.

? *முதலில் தேசிய முன்னணி என்றார்கள்; பிறகு மூன்றாவது அணி ஆனது; அதன் பிறகு ஐக்கிய முன்னணி, இப்போது கடைசியாக(?) கூட்டாட்சி முன்னணி (Federal Front) என்று பெயர் வைத்துள்ளார்கள்! பெயர் வைக்கவே இத்தனை குழம்பும் இவர்கள் இன்னும் என்னவெல்லாம் செய்வார்களோ...?!*

! ஆட்சி நிலைக்கப் பாடுபட வேண்டும் என்பதில் மட்டுமாவது குழப்பம் இல்லாமல் இருக்கிறார்களே... அதற்காகவாவது பாராட்டுங்கள்!

● யூ. எஸ். கிருஷ்ணமூர்த்தி, சென்னை - 106.

? *எல்லாம் இருக்கட்டும்... முதலில் மூ.க. விலைவாசியைக் கட்டுப்படுத்துவாரா?*

! அது.. சிதம்பரம் மத்தியிலும், இவர் மாநிலத்திலும் பட்ஜெட் தயாரிப்பில் காட்டும் சாமர்த்தியத்தைப் பொறுத்திருக்கிறது!

● வி. சீனிவாசன், சென்னை - 91.

? *'ஆச்சி' தற்போது என்ன செய்து கொண்டிருக்கிறார்...?*

! பேசாமல் 'தாச்சி'க் கொண்டு நடந்த நிகழ்ச்சிகளை அசைபோட்டுக் கொண்டிருப்பார். அம்மாவுக்கு ஜால்ரா போட்டு, ரஜினியை அவர் தூற்றிப் பேசப் போக... கோடம்பாக்கத்தார் எந்தப் படத்துக்கும் அவரை 'புக்' செய்ய பயப்படுகிறார்களாம்...!

● வி. சத்தியப்ரியன், சென்னை - 15.

? *முன்னாள் தலைமைச் செயலர் ஹரிபாஸ்கர் சஸ்பெண்ட் செய்யப்பட்டது வெறும் கண்துடைப்பா?*

! சி.பி.ஐ. விசாரணையில் குற்றம்சாட்டும் அளவுக்கு ஆதாரங்கள் கிடைக்கிறதா என்பது முக்கியமில்லை... ஹரிபாஸ்கர் விசாரணைக்கு உள்ளானார் என்பதே அவரை சஸ்பெண்ட் செய்யப் போதுமான காரணம்தான்.

● எஸ். மீனாட்சி, கோவை - 6.

? *உடுமலை நாராயண கவியைப் பாராட்ட வேண்டியதுதான்; அதற்காக கவிஞர் வைரமுத்து, பாபநாசம் சிவன் பாடல்களைக்*

கிண்டலடிக்க வேண்டுமா....?

! இச் செய்தி உண்மையெனில், வருத்தம் அளிக்கிறது. மெட்டுக்குப் பாட்டமைக்கும் வைரமுத்துவுக்கு வாக்கேயக்காரரான (இசை ஞானத்துடன் பாடல் எழுதுபவர்) சிவனின் அருமை நம்மை விட அதிகமாய்த் தெரிந்திருக்க வேண்டும். வைரமுத்துவுக்கு உடன்பாடாய் இராத, இறையுணர்வு என்கிற அம்சத்தை ஒதுக்கி விட்டுப் பார்த்தால் கூட, இறவா வரம் பெற்ற சிவனின் பாடல்கள் தமிழிசை வளர்ச்சிக்கு மகத்தான முறையில் உதவியிருக்கின்றன. இதை சரித்திரம் உணர்த்தும்.



• நம்பலாமா...?

● இரா. திலீப், திருச்சி - 14.

? நரசிம்மராவுக்கு ஜனாதிபதி ஆசை உள்ளதாமே...?

! ஜே.எம்.எம். லஞ்ச விவகாரம், யூரியா இறக்குமதியில் 133 கோடி ரூபாய் மோசடி... என்று போகிற போக்கைப் பார்த்தால், அந்த ஆசைக்கும் ஆபத்து போலிருக்கிறதே!



• உலக அரங்கு ஏறுவாரா...?

● ஆர். ராஜதுரை, சீர்காழி - 10. ❑

? பெரியார் வழியில் நடக்கும் பகுத்தறிவாளரான முதல்வர் கருணாநிதி, திருப்பதி கோயில் பிரசாதத்தை வாங்கியது சரியா....?

! சரிதான். அனுப்பியவரின் உணர்வை மதித்துப் பெற்றுக் கொண்டது மிகச் சரியே. மறுத்திருந்தால்தான் அநாகரிகம்.



• செய்தது சரியா?

● எஸ். நாரம்புநாதன், சின்ன காஞ்சிபுரம்.

? ஜாதிப் பெயரைச் சொல்லித் திட்டியதால் சேலத்தைச் சேர்ந்த ஒரு மாணவி தற்கொலை செய்து கொண்டது பற்றி...?

! மனம் சோர்ந்து போகிறது. ஐம்பதாண்டு சுதந்தரத்துக்குப் பின்னரும் இப்படியொரு நிகழ்ச்சி நடப்பதென்பது நாட்டுக்கே தலைகுனிவு. அரசின் கொள்கைகள் ஜாதியை ஒழிப்பதற்குப் பதில் ஜாதி வேற்றுமையை நிரந்தரமாக்குகின்றன என்பதற்கு இன்னொரு எடுத்துக்காட்டு.



• வெட்டினால் முளைக்குமா?

● சாலை. கி. பாஸ்கரன், சென்னை - 39.

? சசிகலா மனசு ஜெயலலிதா மனசு எப்படி துடித்துக் கொண்டிருக்கும்...?

! முதலில் : லப் டப்

அப்புறம் : டப்பு! டப்பு!

இப்போது : தப்பு! தப்பு!

● பி. சிவா, பாளையங்கோட்டை.

? உலக அரங்கில், மன்மோகன்சிங் போல சிதம்பரம் பேசப்படுவாரா...?

! சிங்ஜீயின் திட்டம் முழுக்க சிதம்பரனார் அறிவார் என்பதால் அதை அப்படியே செயல்படுத்தலாம்; பெயர் வாங்கலாம். ஆனால், அது வரை ஆட்சி நிலைக்கணுமே!

● பி.கே. ரகுபதி, சென்னை - 107.

? கர்நாடகாவிலிருந்து பாசன நீர், ஆந்திராவிலிருந்து குடிநீர், டெல்லியிலிருந்து அரிசி, தமிழகத்திலிருந்து...?

! ஆதரவு!

● ஸ்ரீவித்யா காளிதாஸ், சிதம்பரம்.

? சீன உதவியுடன் பாகிஸ்தான் புதிய ஏவுகணைகளை வடிவமைத்து வருவது பற்றி...

! கவலைக்குரிய விஷயம்தான். போதாக்குறைக்கு, பாக் உளவு அமைப்பான ஐ.எஸ்.ஐ.யின் சதி வேலைகள் இந்தியத் துணைக் கண்டம் முழுவதிலுமே விரவியிருப்பதாக ஒரு ரஷ்ய பத்திரிகை ஆதாரங்களுடன் தகவல் வெளியிட்டிருக்கிறது. இந்தச் சூழ்நிலையிலும் காஷ்மீர் தேர்தல்கள், தாம் எதிர்பார்த்தது போல் கலாட்டாவில் முடியாமல், வெற்றிகரமாக நடந்ததைக் கண்டு பயந்து போயிருக்கிறார் பேனசிர். புதிய அரசுடன் பேச்சு வார்த்தை நாடுவது இந்தப் பயத்தின் அடிப்படையில்தான். இதைப் பிரதமரும் வெளியுறவுத் துறை அமைச்சகமும் உணர்ந்து, மிக கவனமாகச் செயல்பட வேண்டும்.

❑ ரூ. 25 பரிசு பெறுபவர் :
ஆர். ராஜதுரை,
97, பிடாரி வடக்கு வீதி,
சீர்காழி — 609 110.

● கே. விஜயன், கோவை.

? காவிரித் தண்ணீருக்காக இப்போது ஜெயலலிதா மெரீனா கடற்கரையில் உண்ணாவிரதம் இருக்க முன்வருவாரா...?

! இன்றைய தமிழக அரசை ஒரு தர்மசங்கடத்துக்கு உள்ளாக்குவதற்காக அவர் அவ்வாறு செய்ய முன்வரலாம். ஆனால் முந்தைய மரியாதை இப்போது கிடைக்காது. டில்லியிலிருந்து யாரும் பறந்து வந்து கண்துடைப்பு செய்யமாட்டார்கள்!

● எஸ். ஏ. கேசவன், குருமலை.

? தாலி கட்டும் போது கெட்டிமேளம் கொட்டச் செய்வது ஏன்...?

! அரட்டையில் இறங்கியிருக்கக் கூடிய விருந்தினர்களின் கவனத்தை ஈர்த்து, ஆசி வழங்கச் செய்ய; அமங்கலமான வார்த்தை அல்லது ஓசை ஏதும் காதில் விழாதிருக்க... சினிமாவில் கிளைமேக்ஸின் போது பின்னணி இசையின் வேகம் கூடுவது மாதிரி!

தொலைவிலிருந்து அலுவலகம் சலனமில்லாமல் இருக்கிறது. மெயின் ரோட்டில் விரைகிற வாகனப் புழுதியில் இன்றைய வெள்ளையுடை அழுக்காகி விடக் கூடாது. சந்திரன், டீக் கடை மறைவில் ஒதுங்கிக் கொள்கிறான். அங்கே நிழலில் ஏற்கெனவே சுருண்டிருந்த கறுப்பு நிழலில் ஏற்கெனவே சுருண்டிருந்த கறுப்பு நாய் ஒருமுறை தலையுயர்த்தி அவனைப் பார்த்து விட்டு அசுவாரஸ்யமாய் கண்களை மூடிக் கொள்கிறது. அலுவலகம் முடிந்து சுமதி வருகிற நேரம்தான். தொலைவில் கதவு திறந்து ஒவ்வொருத்தராய் வெளியே வருகிறார்கள். ஸ்கூட்டர் அருகில் சுமதியின் வருகைக்காக வெள்ளையுடையில் காத்து நிற்கிற சந்திரனை அனைவருமே அந்தக் கறுப்பு நாயைப் போலவே ஏறிட்டு, மறுகணம் பார்வை நகர்த்திப் போகிறார்கள். மனைவிக்குக் காத்து நிற்கிற கணவன்மார்களைக் கண்டால் எல்லோருக்கும் அவ்வளவு இளப்பமாய் போய் விட்டது.

பொதுவாய் இதுபோல் சற்று முன்னாலேயே வந்து விடுகிற சந்தர்ப்பங்களில் சந்திரன் அலுவலகத்திற்குள் காத்திருப்பான். வரவேற்பறை சோபாவில் பலரும் அவனை யாரென்று விசாரித்துப் போவார்கள். அவன் வந்த தகவல் அறிந்து தொலைவில் சுமதி கையசைப்பாள். அலுவலக கடிகாரம் மிகவும் மெல்ல நகரும். கவுண்டருக்கு அந்தப் பக்கம் சுமதியின் மேஜையில் ஹெட்கிளார்க் அசடு வழிவார். பல்வேறு சாக்கு வைத்து அலுவலக விடலைகள் சுற்றி வட்டமிடுவார்கள். அனைத்தையும் சிரித்துச் சமாளித்து சுமதி வேலையில் இருப்பாள். வெளியே சோபாவில் சந்திரன் நெளிந்து கொள்வான். அவனுடைய ஆவடி பேக்டரியில் பெண்கள் யாருமில்லை. இந்தச் சூழல் அவனுக்குப் பழக்கமில்லை. அவன் ஒன்றும் பிற்போக்கானவன் இல்லை. ஆனால் தனக்கென்று வரும் போது யாருக்கும் இதெல்லாம் பிடிக்கிறதில்லை.

"போலாமா?"

பச்சை நிற காட்டன் புடைவையில் ஜரிகை நெளிகிறது. சுமதி ஸ்கூட்டர் பின்னால் உட்கார்ந்திருக்கிறாள். போக்குவரத்தில் வார்த்தைகள் இல்லாமல் ஸ்கூட்டர் விரைகிறது. வெள்ளையில் கோடு போட்ட கடற்கரை சாலை. கூடைக்காரி வெள்ளரிக்காயில் தண்ணீர் தெளிக்கிறாள். மக்காச்சோளம் அடுப்புச் சூட்டில் புரண்டு கொள்கிறது. வாணலியில் சப்தமிட்டு கடலைக்காரன் அழைப்பு விடுக்



கிறான். வாகனங்களை ஆர்வமாய் மடக்கி, கான்ஸ்டபிள், ஓரமாய் பணம் செய்கிறார். எரியலாமா என்று லைட் ஹவுஸ் யோசிக்கிற நேரம். தெரு நடுவே எருமை மாட்டைச் சுற்றிக் கொண்டு ஸ்கூட்டர் விரைகிறது.

"யாரு அந்த சோடாபுட்டி?"

வண்டியை ஓட்டிக் கொண்டே சந்திரன் திரும்புகிறான். காற்றில் வார்த்தைகள் கரைந்து, பின்சீட்டில் அவனது பரந்த முதுகில் சாய்ந்து, சுமதி மறு ஒலிபரப்பு கோருகிறாள்.

"ம்?"

"கையிலே ஸ்வீட் பாக்ஸ் வைச்சுக்கிட்டு வழிஞ்சிட்டிருந்தானே?"

"ம்."

"யாரு அந்த சோடாபுட்டின்னேன்?"

"நிர்மல்குமார். அக்கவுண்ட்ஸ் கிளார்க். இன்னிக்கு அவனுக்கு பர்த்டே."

"ஓஹோ!"

கச்சேரி ரோட்டில் எதுவும் பேச முடியவில்லை. குறுகிய சந்துகளில் ஸ்கூட்டர் விரைகிறது. மைலாப்பூரின் புராதனங்களை அழித்து எழுப்பப்பட்ட பிரும்மாண்டமான அடுக்கு மாடி வீடுகள். காற்று சிலுசிலுக்கிற ஏழாவது மாடியில் கோவில் கோபுரம் சிறியதாய்த் தெரிகிறது.



ஜன்னலில் சுமதி பார்த்துக் கொண்டிருக்கிறாள். சந்திரன் முகம் கழுவி காதில் சோப்புடன் வந்து நிற்கிறான்.

"அவர் என்ன பெரிய மகாத்மா காந்தியா?"

ஜன்னலில் சுமதி புரியாமல் திரும்புகிறாள்.

"யாரு?"

"அதான் ஸ்வீட் கொடுத்தாரே. அந்த நிர்மல்குமார்."

"அவருக்கென்ன?"

"ஓ. அவரா?"

சந்திரன் விகாரமாய் இளிக்கிறான். நல்லவன்தான். ஆனால் அற்ப சந்தேகம் அவனை அலைக்கழிக்கிறது. 'சொய்ங்' என்று சமையலறையில் சப்தம் எழுகிறது. ஏழாம் மாடி பூராவும் மிளகாய் நெடி. தோளுக்கருகே சந்திரன் குரல் கேட்டு சுமதி திரும்புகிறாள்.

"மத்தியானம் லஞ்ச் எல்லாம் எப்படி? எல்லோரும் சேர்ந்துதானா?"

**டை**னிங் டேபிளில் ஆவி பறக்கிறது. சுமதி எதுவும் பேசாமல் பரிமாறுகிறாள். அவள், அவனுக்கு எந்தக் குறையும் வைக்கிறதில்லை. வாஷ்பேசினில் சந்திரன் கை கழுவித் திரும்புகிற போது சிறிய துண்டு ஒன்றை சுமதி கொடுக்கிறாள்.

"ஆபீஸாயிருந்தா கர்சீப் கொடுத்திருப்பீங்க."

இரவு மௌனத்தில் கழிகிறது. ஜன்னலில் கோபுரம் நிழற்படமாய்த் தெரிகிறது. தூக்கத்தின் புரளல் போலும் ஆங்காங்கே ஜனநடமாட்டம். தொலைவில் டீக்கடையில் சினிமா முடிந்த கும்பல். தெரு விளக்கைக் கடந்து ஒற்றை ரிக்ஷா இருளில் மறைகிறது. சுமதி எப்போது தூங்கினாளென்றே தெரியவில்லை. விடிந்து நகரத்தின் இரைச்சல் ஏழாம் மாடியை எட்டுகிறது. கண் விழித்ததும் சுமதி ஜன்னலில் பார்க்கிறாள். கீழே ஸ்கூட்டர் இல்லை. இந்த வாரம் சந்திரனுக்கு முதல் ஷிப்ட். அவன் புறப்பட்டுப் போயிருக்கிறான்.

குளிர்ந்த தலையணையில் சுமதி மீண்டும் சாய்கிறாள். மேலே மின் விசிறியின் குரோமியத்தில் அவள் படுத்திருப்பது தெரிகிறது.

யாரும் எடுக்காமல் வெளியே பால் பாக்கெட் கிடக்கிறது. அழைப்பு மணி ஒலித்து வேலைக்காரி வருகிறாள். ஏறிவிட்ட வெய்யிலில் சுமதிக்குக் குளித்த மாதிரியே இல்லை. கிடைத்த புடவையைச் சுற்றிக் கொண்டு ஆளுயரக் கண்ணாடி முன்நின்று அழகு பார்க்காமலே அன்றைய அலங்காரம் முடிகிறது. வெறுமனே மூடியதும் கதவு பூட்டிக் கொள்கிறது. லிப்ட் இறங்கும் போது பூமியைப் பிளந்து உள்ளே போகிற சீதையைப் போல சுமதி உணர்கிறாள். பாரிமுனைக் கும்பலில் நடந்து அலுவலகத்தை அடையும் போது பத்து நிமிடம் தாமதமாகி விடுகிறது.

"என்ன சுமதி? லேட்டா?"

நுழைகிற போதே அசடு வழிந்து ஹெட் கிளார்க் போன் செய்கிறார். ரெஜிஸ்தரில் வருகை பதிவாகிறது. நாற்காலியில் அமர்ந்து

ம.வே. சிவகுமார்



அவர் ஒரு தீவிர கம்யூனிஸ்ட். மரணப் படுக்கையில் கிடந்தார். தன் உயிர் நண்பனை அருகில் அழைத்தார். "நான் உடனே பி.ஜே.பி. கட்சியில் சேர ஏற்பாடு செய்" என்று கடைசி ஆசையைக் கூறினார்.

நண்பருக்கு ஒன்றும் புரியவில்லை. "நீ பி.ஜே.பி.யின் தீவிர எதிரி ஆயிற்றே. இந்தக் கடைசி நேரத்தில் ஏன் அவர்களுடன் போய்ச் சேர விரும்புகிறாய்?"

அதற்கு கம்யூனிஸ்ட் தோழர் சொன்னார் : "நண்பா, யோசித்துப் பார். ஒரு கம்யூனிஸ்ட் குறைவதை விட ஒரு பி.ஜே.பி. நபர் குறைவது நாட்டுக்கு நல்லதல்லவா!"

நன்றி : 'ஹிந்து'
— கலை அரசு

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●

படபடப்பு அடங்கியதும் அடுத்த ஆள் ஆஜர்.

"குட்மார்னிங்."

சுமதி நிமிர்கிறாள். எதிரே சிரித்த முகத்தில் நிர்மல் குமார். யந்திரம் போல் புன்னகைத்து சுமதி வேலையில் ஆழ்கிறாள். யாருடனும் சகஜமாய் பேசுவது இன்றைக்கு கஷ்டமாய் தெரிகிறது. மத்தியானம் எதிர்க்கடையில் லஸ்ஸி வரவழைக்கிறாள். பியூன் செல்வராஜ் அவள் கணக்கில் ஒன்று குடித்துக் கொள்கிறான். வேலை நிமித்தம் இந்த அலுவலகம். இங்கே அனைவரின் நட்பும், தயவும் தேவைப்படுகிறது. டெஸ்பாட்ச் வசந்தியுடன் லஞ்ச் ரூமில் பேசும் போது அழுகை வந்து விடுகிறது. அவள் ஆறுதலும், பவுடரும் கொடுக்கிறாள். பனிச்சென்று முகம் கழுவி பிற்பகல் முடிகிறது. கவுண்டருக்கு வெளியே சந்திரன் தலைதெரிகிறது. அவசரத்தில் செருப்பு கிடைக்கிறதில்லை. சுமதி தோள் பையை எடுத்துப் புறப்படுகிறாள்.

"மத்தியானம் ஒரு தடவை அலங்காரம் பண்ணிப்பியா என்ன...?"

வண்டியை ஓட்டிக் கொண்டே சந்திரன் கேட்கிறான். தன் உடலில் என் முனையும் அவன் மேல் படாமல் பின்சீட்டில் சுமதி அமர்ந்திருக்கிறாள். சட்டென்று வண்டி ஓரம் கட்டி நிற்கிறது. பைக் ஒன்று அவர்களைக் கடந்து போகிறது.

"பீச் ரோடுலேர்ந்து வாட்ச் பண்றேன். பின்னாடியே வர்றான்... ராஸ்கல்"

ஸ்கூட்டர் புறப்பட்டு நேரே ஹோட்டல் முன்நிற்கிறது. சந்திரன் உற்சாகமாய் ஏதேதோ ஆர்டர் செய்கிறான். சுமதிக்கு எதுவுமே வேண்டியிருக்கவில்லை. வீடு திரும்பும் போது இருட்டி விடுகிறது. அலுப்பில் கதவு மூடி லிப்ட் மேலே நகர்கிறது. ஏழாவது மாடியில் கதவு திறந்ததும் அனைத்தையும் மறந்து சுமதி ஆனந்தக் கூச்சலிடுகிறாள். மதுரையிலிருந்து அவளுடைய ஒரே தங்கை அழகு மீனா அன்றலர்ந்த மல்லிகை போல் பூட்டிய கதவருகே அறிவிப்பின்றி அலுங்காமல் மலர்ந்திருக்கிறாள்.

ஏழாவது மாடி எட்டிப் பார்க்கிறது. வேகமாய் ஓடிவந்து, பிதுங்க அணைத்து, சகோதரிகள் எழுப்பிய உற்சாகக் கூச்சலில் சந்திரன் எக்கேடோ கெட்டுப் போகிறான். வீடு, பயணம், குடும்பம், ஊர் விஷயம், உறவினர் உடல் நலம் என்று அதே வேகத்தில் அனைத்தையும் பேசியபடி அடுக்களையில் வளைய வந்து சிவந்த மருதாணிக் கையில் எவர்சில்வர் மினுமினுக்க சுமதி கொடுத்த காப்பியுடன் ஒரு துள்ளலில் எதிரே அழகு மீனா வந்து நிற்கிறாள்.

"ஹாய்!"

காப்பியை வாங்கும் போது விரல்கள் தீண்டிக் கொள்கின்றன. சந்திரன் கண்களில் ஒரு கணம் கள்ளம் தோன்றி மறைகிறது. அதை சிறிதும் கவனியாதவள் போல அழகு மீனா பேச்சைத் தொடர்கிறாள்.

"ஸாரி. தடங்கலுக்கு வருந்துகிறேன். மே மாசம் பரீட்சை. எக்மோர்லே க்ளாஸ் இருக்கு. ஒரு ரெண்டு மாசம் இங்கே இருப்பேன். தினம் நீங்கதான் ஸ்கூட்டர்லே டிராப் செய்யணும். என்ன?"

பதிலுக்குக் காத்திராமல் பேச்சு தொடர்கிறது.

"அப்புறம் இன்னொரு விஷயம். இன்னிக்கு நைட்டு நானும், சுமதியும் அந்த ரூம். நீங்க ஹால்லே படுத்துக்கங்க. பார்த்து நிறைய நாளாச்சு. அத்தனை கதையும் பேசியாகணும். கொஞ்சம் அட்ஜஸ்ட் பண்ணிக்கங்க. என்ன?"

துள்ளலில் திரும்பும் போது துப்பட்டா நழுவுகிறது. சட்டென்று விழியுயர்த்திக் கண்களில் கலங்கடித்து மேலே சரிசெய்து போகிறாள். மறைவில் ஒலிக்கிற கொலுசுச் சப்தம் மாதிரி இரவு பூராவும் கிணுகிணுக்கிற கீச்சுக் குரல்கள். சந்திரன் தூங்கும் போது நெடுநேரமாகி விடுகிறது. கனவில் அந்த சோடா புட்டி நிர்மல் குமாரும், சௌபாக்யவதி அழகு மீனாவும் மாறி மாறி வருகிறார்கள்.

காலையில் சந்திரனுக்கு முதல் ஷிப்ட். மதியம் இரண்டு மணிக்கு வீடு திரும்புகிற போது சுமதி அலுவலகம் போயிருக்கிறாள். இரவு பூராவும் தூங்காது கிறங்கிய கண்களில் அழகு மீனா கதவு திறக்கிறாள். சிவந்த விரல்களில் கொட்டாவி அடங்குகிறது. சந்திரன் சாப்பிட உட்காருகிறான். சுமதியின் சமையலை

அழகு மீனா பதவிசாய் பரிமாறுகிறாள். ஒரு பத்து வருடம் குறைந்த மாதிரியிருக்கிறது. சந்திரன் கை கழுவித் திரும்புகிறான். வேறு அறையில், கண் படாத மூலையில் அழகு மீனா தூங்கப் போகிறாள். மாலையில் அவன் ஸ்கூட்டரில் எழும்பூரில் கம்ப்யூட்டர் கிளாஸ். கண்களைச் சிமிட்டி அவள் கேட்கிற போது சந்திரனால் மறுக்க முடிகிறதில்லை. ஒரு மாறுதலுக்கு எல்லாம் வேண்டியிருக்கிறது. தியேட்டரில் அவனும், சுமதியும், அழகு மீனாவும் சேர்ந்து பார்த்த திரைப்படங்களின் எண்ணிக்கை கூடுகிறது. பிறந்த நாள் என்று உரிமையாய் ஒருநாள் ஹோட்டலில் செலவு வைக்கிறாள். சென்னையில் பார்க்க வேண்டிய இடங்கள் என்று அவன் வைத்திருந்த பட்டியலில் ஒவ்வொரு சமயம் ஒவ்வொன்றாய்க் கழிகிறது. கண்கவர் இளமை வசீகரத்தில் இரண்டு மாதம் ஓடிப் போனதே தெரிகிறதில்லை. கவர்ச்சிச் சிரிப்பும், பல மாதிரி உடைகளும் அணிந்து தன் வரவைத் தொகுதி இளைஞர்களிடம் பதிவுசெய்து, அறிவிப்பு இல்லாமல் வந்தவள், அறிவிப்பு இல்லாமலேயே மதுரை போய்ச் சேருகிறாள்.

கவுண்டருக்கு வெளியே சந்திரன் தலை தெரிகிறது. மேஜையின் கீழ் கால் அளைந்து சுமதி செருப்பு அணிகிறாள். தோள் பையை எடுத்து வைத்து கடிகாரம் பார்க்கிறாள். கூலரில் சில்லென்ற தண்ணீர் குடித்துச் சந்திரன் திரும்புகிறான். சுமதியின் டேபிளில் நிர்மல் குமார் வந்து நிற்கிறான்.

"என்ன மேடம், வர வர பேசவே மாட்டேங்கறீங்க, ஊடலா?"

"ஒண்ணுமில்லையே."

சுமதி அவசரமாய் எழுந்து கொண்டு அவனைக் கடக்கிறாள்.

கடற்கரைச் சாலை. வெவ்வேறு வர்ணங்களில் காற்றாடிகள் பறக்கின்றன. அப்போது வைத்த மல்லிகை போல் விரிந்த மாங்காய் பத்தை. கணநேரம் காற்றில் சுமதி மெய்மறக்கிறாள். வழக்கம் போல் தலைசாய்த்து சந்திரன் பின்பக்கம் வார்த்தைகளைச் செலுத்துகிறான்.

"என்ன சொல்றான்?"

"யாரு?"

எதுவும் புரியாமல் பின்சீட்டில் பதில் கேள்வி பிறக்கிறது.

"அதான், அந்த சோடாபுட்டி"

"கொஞ்சம் ஓரமாய் வண்டியை நிறுத்துங்க."

"எதுக்கு?"

"நிறுத்துங்களேன்."

வண்டி ஓரமாய் நிற்கிறது. இறங்கிய வேகத்தில் சுமதி, சந்திரன் முன்நிற்கிறாள்.

"இங்க பாருங்க. இன்னொரு தரம் இப்படிப் பட்ட அல்ப எண்ணங்களை தயவுசெய்து

''அப்படியென்றால் மாறுவேடத்தில் நகர்வலம் செல்வது தப்பு என்கிறீரா?''

''அது தப்பில்லை, மன்னா! ஆனால், அதற்காக லட்சக்கணக்கில் மக்களின் வரிப் பணத்தைச் செலவு செய்து தங்களுக்கு மாறுவேடம் போடுவதற்கு தூர தேசத்திலிருந்து ஒரு ஒப்பனைக்காரரை வரவழைக்க வேண்டுமா என்றுதான் கேட்கிறார்கள்!''

– ஞா. ஞானமுத்து

''இனி தமிழ்நாட்டுல எல்லா போர்டும் தமிழ்ல எழுதணும் தெரியுமா?''

''அதுக்காக ரோட்டுல 'Free Left' போர்டை 'இலவச இடது'ன்னு எழுதணுமா?''

– ராதா வாசுதேவன்

எனக்கு உண்டாக்காதீங்க. ஆபீஸ்லே ரொம்ப சங்கடமாயிருக்கு. யாரோடயும் சுபாவமா பேச முடியல்லே. அவங்கள்ளாம் தினம் நான் பாக்கறவங்க. விகல்பமா எதுவும் கிடையாது. குறைஞ்சது என் மனசு அப்படி இல்லே. வெறுமனே சகஜமா பேசறதுனால எதுவும் ஆயிடப் போறதில்லே. சொல்லப் போனா சகஜமாயிருந்தா.. விகல்பமா இருக்க முடியாது. என் தங்கை அழகு மீனாவைப் போல. அவ பேரை நான் சொன்னதும் உங்க கண்ணு இடறுதில்லே? ஏன்? நான் சொல்லட்டுமா? நீங்க சகஜமாயில்லே. ஆனா அவ ரெண்டு மாசம் உங்க கூட பத்திரமா இருந்திருக்கா. மேலே படாம ஸ்கூட்டர்லே வந்திருக்கா. மத்தியானம் பூராவும் தனியாயிருந்திருக்கா. தியேட்டர்லே பக்கத்து சீட்லே உட்கார்ந்திருக்கா. உங்க மனசிலே விகல்பம் இருந்திருக்கலாம். ஆனா உங்களாலே எதுவும் செய்ய முடியலே, இல்லையா? சகஜமாயிருந்தா அப்படித்தான். விகல்பமா யாரும் சட்டுனு நடந்துட முடியாது. புரியுதா? தற்சமயம் என் மனசு சுத்தமாயிருக்கு. கண்ட கேள்வியைக் கேட்டு தயவுசெஞ்சு அதை நீங்களே அசுத்தப்படுத்திடாதீங்க. தெரிஞ்சுதா? வண்டியை எடுங்க."

பின்சீட்டில் சுமதி ஏறிக் கொள்கிறாள். வெளிறிய முகத்தில் ஸ்கூட்டர் புறப்பட்டு போக்குவரத்தில் மறைகிறது. திருப்பத்தில் கோவில் கோபுரம் பெரியதாய்த் தெரிகிறது. ஏழாவது மாடியில் சிறியதாய்த் தெரிகிற அதே கோபுரம்.



எப்படிக் கதையை நகர்த்துவது என்றெல்லாம் இயக்குனர் அதிகம் யோசித்ததாகத் தெரியவில்லை. குணா, மகாநதியில் வருகிற காட்சிகளை, ஷாட் மாற்றாமல் ரீ - மேக் பண்ணி விட்டார். கேமரா கூட அதே பாணியில் நீளநீள ஷாட்களாக

# இதயமே இதயமே

புராதனம் மிக்க காதல்–மோதல்–கல்யாணக் கதை. தாடிக்கார ஹீரோவை, துரத்தித் துரத்தி டெலிபோனில் காதலித்துக் கொண்டே.......... இருக்கிறார் மகேஸ்வரி. யார் நம்மை இப்படிச் சீண்டுவது என்று தெரியாமல் அவர் திணறித் தவிக்கிற விதமெல்லாம் மணிரத்னம் படம் போல இருக்கிறது.

வழக்கமான அப்பா வில்லன் தவிர, கூடுதல் சேர்க்கையாக ஒரு சிவப்பு விளக்கு கோஷ்டி.

மகேஸ்வரி அங்கே சிக்கிக் கொள்வதை இன்னும் அரை மணி முன்னதாகக் காட்டி இருந்தால் முதல் பாதியின் தொய்வைத் தவிர்த்திருக்கலாம்.

இடைவேளைக்குப் பின் அசுர வேகம். நிறையப் பேர் விழுந்தடித்துக் கொண்டு ஓடுகிறார்கள். (தியேட்டரில் அல்ல.) சளைக்காமல் கேமராவைத் தூக்கிக் கொண்டு - அது என்ன ஏரியா?- சந்துபொந்தெல்லாம் துரத்தி, அடித்து, வெட்டி, அசகாய காரம்!

சிவப்பு விளக்குப் பகுதியில் ஹீரோயின் மாட்டிக்கொண்டபின் இருட்டில் சுற்றி வருவது அலுப்பூட்டுகிறது.

குறிப்பிட வேண்டிய விஷயம் 'கருத்தம்மா' மகேஸ்வரியின் இயல்பான நடிப்பும் இனிக்கும் புன்னகைகளும். திரையில் இன்னும் கொஞ்சம் வெளிச்சம் கூட்டியிருந்தால் கூடுதலாக ரசித்திருக்கலாம்.

சக்கரவர்த்தி என்கிற புது ஹீரோ பற்றி விசேஷமாகச் சொல்ல ஒரே விஷயம்தான். அந்த தாடி அவருக்கு நன்றாக இருக்கிறது. கொஞ்சம்போல் தலை வாரிக் கொண்டிருந்தால் மேலும் லட்சணமாக இருந்திருக்கும். மோதல் காட்சிகளில் யார் ஹீரோ, யார் வில்லன் என்றே தெரியவில்லை.

இன்னும் எத்தனை நாளைக்கு ஒரே மாதிரி காதல் மசாலாக்களைப் பார்க்கச் செய்யப் போகிறாய் இறைவனே, இறைவனே...?

-தரமணி.

பாரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் : வி. முரளி, பாரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் : கி. ராஜேந்திரன்.
ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காட்டுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா, விளம்பரம் : 2345622; மானேஜிங் டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் : ரூ. 525/-.

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka